

பெற்ற தாய்தன்னை மகமறந் தாலும்
பிள்ளை யைப்பெறுந் தாய்மறந் தாலும்
உற்ற தேகத்தை உயிர்மறந் தாலும்
உயிரை மேவிய உடல்மறந் தாலும்
கற்றநெஞ்சம் கலைமறந் தாலும்
கண்கள் நின்றிமைப் பதுமறந் தாலும்
நற்ற வத்தவர் உள்ளிருந் தோங்கும்
நமச்சி வாயத்தை நான்மற வேனே

--நமச்சிவாயப்பதிகம் (திருவருட்பா)

# ஸப்தகிரி

## மார்ச் - 1994


தனிப்பிரதி ரூ. 2

வருடச்சந்தா ரூ. 24

மலர் 24

இதழ் 10



சிறப்பாசிரியர் :

திரு. டி.வி.எஸ்.என். மூர்த்தி, ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

ஆசிரியர்:

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.,

துணையாசிரியர்:

திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:

EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.


## உள்ளுறை


| | பக்கம் |
|---|---|
| குலசேகரன் தாலேலோ என்ற உரைத்த தமிழ் மாலை ... | 5 |
| முமுட்சுப்படி ... | 11 |
| தேவராஜாஷ்டகம் ... | 17 |
| பசுபதீச்சரம் ... | 21 |
| குமரி மாவட்டத்தில் மகாசிவராத்திரி விழா ... | 23 |
| பகவத் கீதை ... | 33 |
| என்போத நைவேத்தியம் ... | 38 |
| திருமகள் திருவடிக் காப்பு ... | 41 |
| இறைவன் தொடர்ந்த வழக்கு ... | 43 |
| நான் எனும் அகந்தை ... | 46 |


## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : உமா சங்கரன் - சித்திரம்: கே. ஜெகதீஷ்.

பின்னட்டை : நந்தி வாகனத்தில் அம்மையப்பன் ஸ்ரீ கபிலேஸ்வரசுவாமி கோயில் - திருப்பதி.

முதல் உள்ளட்டை : ஸ்ரீ கல்யாணவேங்கடேஸ்வரசுவாமி கோயில் - ஸ்ரீ நிவாசமங்காபுரம்.

2வது உள்ளட்டை : ஸ்ரீ வேதநாராயணசுவாமி கோயில்- நாகலாபுரம்.

JAGADISH

# உங்களுடன்....

'எனது நாடு', 'எனது மொழி', 'எனது இனம்' என்று கூறிடும் ஒருவரை நாம் போற்றுகின்றோம். அதே சமயத்து 'நான்', 'எனது' என்று கூறிடும் ஒருவனுக்கு அந்த எண்ணம் அழிவுக்கு வழி என்று அறிவுரை கூறுகின்றோம். ஏன்? முதலில் கூறிய 'எனது' ஒருவனுடைய பற்றினைத் தெரிவிக்கிறது. அப்பற்றினால் நாடு, மொழி, இனம் மேன்மையுற வழிவகுக்கப்படுகிறது. ஆனால் 'நான்' 'எனது' என்ற எண்ணங்கள் மனிதனின் குறுகிய மனப்பான்மைக்கு இட்டுச்செல்கின்றன. விளைவு ஒருவனுடைய உயர்வினால் மற்றவனுடைய உயர்வு நசுக்கப்படுகிறது; அழிக்கப்படுகிறது. ஆகவே அவ் எண்ணங்கள் களையப்படவேண்டும் என வலியுறுத்தப்படுகிறது.

'நான்' 'எனது' எனும் பலவீனங்களே மற்றைய பயங்கரமானத் தவறுகளுக்கு வித்திடுகின்றன. ஆம், கோபம், பொறுமை, காமம், கொள்ளை, கொலை எனும் பண்புக்கூறுகள் யாவும் தன்னல உணர்வுகளின் வெளிப்பாடுகளேயாம். மனிதனிடம் குடிகொண்டுள்ள நிறைகுறை உணர்வுகள் சத்துவ, ரஜோ, தமோ குணங்களாகப் பிரிக்கப்படுகின்றன. ரஜோ மற்றும் தமோ குணங்கள் மறையும்போதுதான் சத்துவ குணம் பிறக்கின்றது. இக்குணங்கள் மனிதனுடன் பிறந்தவையல்ல. வளர்க்கப்படுகின்றன என்பதே உண்மை. போதும் என்ற மனப்பான்மை மற்றையும் போதுதான் தன்னலம் பிறக்கின்றது. அதுவே முன் குறிப்பிட்டது போன்று, பல குறைகளுக்கு வழிவகுக்கின்றது.

பாம்பு கடித்தால் நம் உயிருக்கு ஆபத்து என்ற உண்மையை கடிபடுவதன் மூலம் தெரிந்து கொள்ளத்தேவையில்லை. கடிபட்டவர் இறந்ததைக் கொண்டு அறியலாம். அது போலவே வாழ்க்கையில் முன்னேறியவர்கள் பலர் தங்களுடைய ஒரு சில பலவீனங்களால் படுகுழியினில் வீழ்ந்தாரும் உண்டு. இவற்றை மனதிற்கொண்டு பாம்பைக் கண்டு ஒதுங்குவதும், பலவீனங்களைக் களைவதுமே ஒருவன் பின்பற்ற வேண்டிய பாடங்களாகும். இதனைத்தான் இதிஹாஸங்கள், காவியங்கள், புராணங்கள் வாயிலாக நமது இந்து சமயம் புகட்டுகின்றது. இந்து சமயத்தில் பல கடவுளர் வழிபாடு இடம்பெற்றுள்ளன. இவையாவும் ஒருருக்கு இட்டுச் செல்லும் பாதைகளாக, ஒரு கடலில் கலந்திடும் ஆறுகளாகத் தான் நமது இந்து சமயம் நமக்குக் கூறிவரும் செய்தியாகும்.

வேத உபநிடதங்கள் உள்ளிட்ட நமது இந்து சமய நூல்கள் யாவும் கடவுளர்களின் புகழுரைகளை மட்டும் சொல்லிப்போகவில்லை. வேறு சமய இலக்கியங்களில் இல்லாத அளவு, பல கதைகளையும், கிளைக் கதைகளையும், கதைமாந்தர்களையும், நிகழ்ச்சிகளையும் கொண்டு விளங்குகின்றன. ஏன் என்று சற்றே சிந்தித்தால், மனித இனத்தின் எதிர்கால நலனைக் கருதி, மேற்கொண்ட நம் முன்னோர்களின் சீரிய சிந்தனையின் விளைவுதான் என்பது தெரியவரும்.

நமது சமயம் நல்லவர்களை தேவர்கள் என்றும், தீயோரை அரக்கர் என்றும் இனம் காட்டியது. அவ்வாறு அரக்கர்களைப் பற்றி விளக்குமிடத்து அவர்களைச் சிறந்த வீரர்களாகவும், தவசிரேஷ்டர்களாகவும், அறிவாளிகளாகவும், தங்கள் இனமேம்பாட்டிற்காகத் தங்களையே அழித்துக்கொண்டவர்களாகவும் படம்பிடித்துக் காட்டப்பட்டுள்ளனர். இவ்வளவு பெருமை பெற்றிருந்தும், ஏன் தங்கள் அழிவுக்குக் காரணமானார்கள்? நல்லவர்களின் தோல்வியில் தங்கள் வெற்றியைக் கொண்டாடியதாலும், நலிந்தோர்மீது தங்கள் ஆற்றலைக் காட்டியதாலும், கொண்ட வரத்தால் கொடுமைகள் புரிந்ததாலும், பிற இனத்தாரின் அழுகையில் தங்கள் மகிழ்ச்சியைக் கண்டதாலும்தான், நல்லவர்கள் என்று கூறிப்பிட்ட தேவர்களும் சில சமயங்களில் இன்னல்களுக்கு இலக்கானது ஏன்? தங்களுக்குள் ஏற்பட்ட பதவி வெறியாலும்,

(48-ஆம் பக்கம் பார்க்க)

அறிநிலையததுறை உதவி ஆணையர பரிநதுரையின் பேரில, பிறபடுததப்பட்டோர மற்றும் தாழ்ததப்பட்டோர்க காக, மலிவு விலையில ஸ்ரீவேங்கடேஸ்வரர, ஸ்ரீபதமாவதி தாயார ஆகியோரின் கல் மற்றும் பஞ்சலோக திருவுருவச சிலைகளும் , அவர்களுடைய கோயிலுக்கென ஒலிப் பெருக்கிச் சாதனங்களும் அவற்றின் தயாரிப்புசசெலவில 10 சதவிகித விலைக்கே வழங்கப்படும்.

* * *

திருமலையில் ரூ. 30 இலட்சம் செலவில் "ஸ்ரீபத்மாவதி பரிணய மண்டபம்" ஒன்று புதியதாகக் கட்டப்படும்.

* * *

திருப்பதிககு அருகே உள்ள விமானதளத்திற்கு "ஸ்ரீவேஙகடேஸ்வரா விமான நிலையம்" என்று பெயரிடப்பட்டுள்ளது. இந்த நிலையத்தின் வளர்ச்சிக்கான கடனை தி.தி. தேவஸ்தானம் வழங்கியுள்ளது. இளம்பிள்ளை வாதம், நரம்புத் தளர்ச்சி நோய், (வலிப்பு) மற்றும் மனநோய் ஆகியவற்றால் பாதிக்கப்பட்டவர்களுக்காகவும், பார்வையற்றவரகளுக்காகவும் மறுவாழ்வு மையங்கள் அமைக்கப்படும்.

* * *

திருப்பதியில் உளள தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீவேங்கடேஸ்வரா ஆராய்ச்சி மற்றும் மருத்துவமனையின் நிருவாகச் செலவிற்காக ஆண்டுதோறும் ரூ.2.5 கோடி ஒதுக்கப்படும். நவீன மருத்துவச் சாதனங்கள் மற்றும் ஆரம்பக் கட்ட செலவிற்காக இவ்வாண்டு மட்டும் ரூ. 1.64 கோடி அதிகமாக ஒதுக்கப்பட்டுள்ளது.

* * *

# செய்திச் சுருக்கம்

## ஒலிப்பதிவு

பெருமைமிகு வைணவ ஆசார்யர் ஸ்ரீதிருமலை அனந்தாழ்வான் குலத்தோன்றலான ஸ்ரீ உ.வே. தி.அ. கோபாலாசார்யா சுவாமிகள் மூலமாக, 'திருமலை மரபு' முறையில் நாலாயிரத்திவ்ய பிரபந்தப் பாசுரங்கள் ஒலிப்பதிவு செய்யும் பணி 21-2-94 அன்று இனிதாகத் துவங்கப்பெற்றது.

தி.தி.தேவஸ்தான ஒலிப்பதிவு பொறியாளர் திரு. எஸ். மகாலிங்கம் அவர்களின் மேற்பார்வையில் இப்பணி மேற்கொள்ளப்பட்டுள்ளது. ஏற்கெனவே, நான்கு வேதங்களும் 3000 மணி நேர அளவில் ஒலிப்பதிவு செய்யப்பட்டுள்ளன.

இவ் ஒலிப்பதிவு பணி தொடர்பாக ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு வருகை புரிந்தோரை, தி.தி. தேவஸ்தான ஆழ்வார் திவ்ய பிரபந்தத்திட்டத்துறை உதவி இயக்குநர் முனைவர. பொன். சௌரிராஜன் அவர்கள் வரவேற்க, தி.தி.தேவஸ்தான கண்காணிப்புப் பாதுகாப்பு அலுவலர் திரு. குருவப்பா, தி.தி. தேவஸ்தான இசைக்கல்லூரி முதல்வர் பேராசிரியர் நூகல சின்ன சத்யநாராயண ஆகியோர் பங்கேற்று உரையாற்றினர். அதற்கு முன்பாக தி.தி. தேவஸ்தான பாதுகாப்பு அலுவலர் திரு. எஸ்.எல்.வி. நாராயண அவர்களால் திரு. தி.அ. கோபாலாசார்யார் சுவாமிகளும் எஸ். மகாலிங்கம் அவர்கள், திரு. எஸ். மகாலிங்கம் அவர்கள் பொன்னாடைப் போற்றி கௌரவிக்கப்பட்டனர்.

* * *

## திருப்பாவை மனனப்போட்டி

திருப்பதி ஸ்ரீஅன்னமாசார்யா கலாமந்திரத்தில் 24-1-94 அன்று காலை பள்ளி மாணவர்கள் பங்கேற்ற திருப்பாவை மனைப்போட்டி நடைபெற்றது. இப்போட்டியில் திருமலை மற்றும் திருப்பதியைச் சேர்ந்த பள்ளி மாணவ மாணவிகள் பலர் பங்கேற்றனர். போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கு 28-1-94 அன்று மேற்படி மந்திரத்தில் தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்கு மூத்தலைவர் திரு. ஏ. செங்கல்ரெட்டி அவர்கள் பரிசுகள் வழங்கினார். இப்பரிசளிப்பு விழாவில் தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. டி.வி.எல். என். மூர்த்தி, பேராசிரியர் எஸ். சர்வோத்தமன், முனைவர் மேடசானி மோகன் ஆகியோர் பங்கேற்று உரையாற்றினர். பரிசு பெற்றவர்களின் பெயர்கள் பின்வருமாறு:- 6, 7, 8 வகுப்பி நிலையில் நடத்தப்படட போட்டியில் செல்வன் டி. ராஜகோபாலன, செல்வன் எஸ். ஸ்ரீநிவாசன, செல்வன், வி.எஸ். பத்ரிநாராயண ஆகியோர்க்கு. முதல், இரண்டாம், மூன்றும் பரிசுகள் முறையே வழங்கப்பட, செல்வி கே. ஸ்ரீப்ரியாவுக்கு ஆறுதல் பரிசு வழங்கப்பட்டது. 9 மற்றும் 10 வகுப்பு நிலைகளில் நடைபெற்ற போட்டியில் செல்வன் பி.ஆர். மாதவன், செல்வன் வி. சுதர்சன், செல்வன் ஆர். கஸ்த்தூரி ஆகியோர்க்கு முறையே முதல், இரண்டாம், மூன்றும் பரிசுகள் வழங்கப்பட செல்வன் கே. இப்ரஹிம், செல்வன் வி. நரசிம்ம மூர்த்தி ஆகியோர்க்கு ஆறுதல் பரிசுகள் வழங்கப்பட்டன. ❖

# குலசேகரன் தாலேலோ என்று உரைத்த தமிழ் மாலை

பகவத் விஷயபூஷணம் ஸ்ரீமத்ரெங்கம் என். ராமஸ்வாமி அய்யங்கார்
ஸ்ரீவில்லிபுத்தூர்.

முன்னுரை :

மாசி மாதத்து மன்னராக விளங்குபவர் மன்னரான குலசேகரர். இவரை "குலசேகரப் பெருமாள்" என்று பெரியோர் கூறுவர். ஸ்ரீராமனை "பெருமாள்" என்று ஸ்ரீவைஷ்ணவ உலகம் கூறும். ஸ்ரீராமனும் குலசேகரரும் அரச குலத்தில் அவதரித்தவர்கள். இருவருடைய திருநக்ஷத்திரமும் புனர்பூசம். இருவருடைய ஆராதனப்பெருமாள் ஸ்ரீரங்கநாதன்.

"எல்லையில் சீர்த்தயரதன் தன் மகனாய்த் தோன்றது முதலாத் தன்னுலகம் புக்கதீறு" என்கிற குலசேகராழ்வார் வாக்கின்படி ஸ்ரீராம பிரானுடைய குலமும், திருநக்ஷத்திரமும், ஆராதனப்பெருமாளும் இவருக்கும் ஒன்றுகவே அமைந்தது.

"எங்கள் குலத்தின்னமுதே! இராகவனே" என்கிற இவருடைய அருளிச்செயலின்படி குலஸாம்யம் ஸூசிக்கப்படுகிறது.

பகவத் ஸம்பந்தமுடைய புனர்வசு நக்ஷத்திரத்தில் இவர் அவதரித்தவர்.

ஸ்ரீராமனைப்போல், வள நகரத்தை மகிழ்ச்சியோடு துறந்த பெருமை குலசேகரருக்கும் உண்டு.

இளையபெருமாளைப்போலே, (லக்ஷ்மணன்) வானாளும் செல்வமும் மண்ணரசும் வேண்டாதவராக கைங்கர்யத்திலே ஆசைப்பட்டவர்.

பரதாழ்வானைப்போலே, அரசமர்ந்தான் அடிசூடும் அரசை ஆசைப்பட்டு பாதுகாபட்டாபிஷேகம் செய்து கொள்ளவிரும்பியவர்.

சத்ருக்கனாழ்வானைப் போலே, உள்வெளி சத்ருக்களை ஜயித்து "மெய்யடியார்கள் தம் எல்லையில் அடிமைத்திறத்தினில் என்று மேவுமனத்தாரும்" என்னும்படி பாகவத சேஷத்வத்(அடிமை)தில் ஊன்றியிருப்பர்.



இப்படி ஸ்ரீராமாயண புருஷர்களுடன் ஒப்பிட்டுச்சொல்லக்கூடிய குலசேகராழ்வார் திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீசௌரிராஜனை ஸ்ரீராமபிரானாகவே கண்டு அதிலும் குழந்தை இராமனாகக் கண்டு தாலாட்டுப் பாடுகிறுர். அது ஈண்டு விவரிக்கப்படுகிறது.

## ஸ்ரீராமராஜனே ஸ்ரீசௌரிராஜன்

குலசேகரருக்குத் திருக்கண்ணபுரத்து சௌரிராஜன் ஸ்ரீராமராஜனாகக் காட்சி அளிக்கின்றுர். பாலராமனின் வடிவழகில் துவக்குண்டு குலசேகரர் தாலாட்டுப் பாடுகிறுர், பெரியாழ்வார் கண்ணனுக்குத் தாலாட்டுப் பாடியது போல.

முதலில் குலசேகரருக்கு இராமனின் தாயின் நினைவுவருகிறது. பெற்ற வயிறுக்குப் பட்டம் கட்டினவன் ஸ்ரீராமன். "இவளைப் பெற்ற வயிறுடையாள் என்ன நோன்பு நோற்றுள் கொலோ" (பெரியாழ்வார் திருமொழி 2-2-6) என்று கோசலைக்குப் புகழ்தேடித் தந்தவன் ஸ்ரீராமன்.

கம்பர்,

ஒருபகல் உலகெலாம் உதரத்துள் பொதிந்து
அருமறைக்கு உணர் அரும் அவனை அஞ்சனக்

கருமுகில் கொழுந்து எழில்காட்டும்
சோதியை
திரு உறப்பயந்தனள் திறம்
கொள் கோசலை"

என்று புகழ்ந்து பேசுவார்.

மேலும் விசுவாமித்திர ரிஷி "கௌஸல்யா ஸுப்ரஜா" (கௌஸல்யா தேவிக்கு நல்ல பிள்ளையான ராமனே!) என்று புகழ்ந்து பேசுகிறார். தாயை குடல் விளக்கம் செய்த தாமோதரனல்லவா ஸ்ரீராமன்!

குலசேகரரும் "மன்னுபுகழ்க் கௌசலை தன் மணிவயிறு வாய்த்தவனே" என்று (நிலையான புகழையுடைய கௌஸல்யினுடைய அழகிய வயிற்றிலே பிள்ளையாகத் திருவவதரித்தவனே) அவதார வைபவத்தை பேசுகிறார். உடனே குலசேகரருக்கு அவதாரத்தின் ப்ரயோஜனம் என்ன? என்ற கேள்வி பிறக்கிறது. அதற்கு விடையிறுக்கும் வகையில் "தென்னிலங்கைக்கோன் முடிகள் சிந்துவித்தாய்" என்று கூறுகிறார்.

வால்மீகி,



ஸ ஹி தேவைருதீர்ணஸ்ய
ராவணஸ்ய வதார்த்திபி: !
அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே
விஷ்ணுஸ் ஸநாதந: !!

என்று (ராவண வதத்திற்காகவே எம்பெருமான் அவதரித்தான். இதுவே அவதாரப்ரயோஜனம்) கூறுகிறார். ஸ்ரீராமன் இராவணனின் முடிகளை சிதறப் பண்ணியதை,

"சதுரமாமதிள் சூழ் இலங்கைக்கு
இறைவன் தலைபத்து
உதிர ஓட்டி ஓர் வெங்கணை
உய்த்தவன்"
(அமலனாதிபிரான்-4)

என்று திருப்பாணாழ்வாரும்,

"உத்தமவமர்த்தல மமைத்ததொர்
எழிற்றறு உயர்த்த கணையால்
அத்திரவரக்கன் முடிபத்துமொரு
கொத்தென உதிர்த்த திறலோன்"
(அதிகாரஸங்க்ரஹம்-44)

என்று ஆரண தேசிகனும் அருளிச்செய்ததை இங்கு ஒப்பிட்டு நோக்கலாம்.

குலசேகரருக்கு, ஸ்ரீராமன் புரிந்த கன்னிப்போர் (Maiden Battle) ஞாபகத்துக்கு வருகிறது. இராமன் வெகு வேகமாகச் செல்லும் அம்பு ஒன்றை தாடகையின் மார்பை நோக்கி எய்கிறான். அது அவள் நெஞ்சில் நில்லாது ஊடுருவிப் போய் விடுகிறது. நல்லவர் சொல்லும் நல்வார்த்தைகள் நல்லவரல்லாத புல்லியர் நெஞ்சிலே புகுந்து உடனே மறைந்து போய்விடுமன்றோ? அதே மாதிரி தாடகையின் நெஞ்சில் இராமபாணம் ஊடுருவி ஓடி விடுகிறது என்கிறார் கம்பர்.

சொல்லொக்கும் கடிய வேகச்சுடுசரம்
கரிய செம்மல்
அல்லொக்கும் நிறத்தினாள் மேல்
விடுதலும் வயிரக் குன்றக்
கல்லொக்கும் நெஞ்சில் தங்காது

அப்புறம் கழன்றுகல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன
பொருளெனப் போயிற்றன்றே"

இராவணனுடைய வெற்றிக் கொடி அறுந்து விழுந்தமாதிரி தாடகை விழுந்திட்டாள் என பதை,

கொடிய தாடகை பாவி
விழுந்தாள் செம்பொன்
முடியன் ராவணன் வெற்றிக்
கொடி விழுந்தால் போல்

என்று அருணசலக்கவிராயர இராம நாடகக் கீர்த்தனையில் கூறுகிறார்.

குலசேகரரும் "திண்திறலாள் தாடகை தன் உரம் உருவச் சிலை வளைத்தாய்" என்றும் "வந்தெதிர்ந்த தாடகை தன் உரத்தைக் கீறி வருகுருதி பொழி தரவல்கணை ஒன்று ஏவி" என்றும் குறிப்பிடுகிறார்.

குலசேகரர் ஸ்ரீராமன் பூமி முழுவதையும் ஆட்சி புரிகை யாகிற பெரிய அரசு செல்வத்தை ஸ்ரீபரதனுக்கே கொடுத்துவிட்டு, பரிபூர்ணமான பக்திப் பெருங்காதலையுடைய இளையபெருமாளுடன்கூட புகுவதற்கு அருமையான காட்டைக்குறித்து எழுந்தருளினான் என்கிறார்.

"தொத்தலர் பூஞ்சுரிகுழல்
கைகேசி சொல்லால்
தொன்னகரம் துறந்து.........
வனம் போய்ப்புக்கு

என்றும் கூறுவார் குலசேகரர்.

கம்பர் ஸ்ரீராமன் கைகேயிடம் கூறுவதாக ஒரு பாடலில் கூறுவார். இங்கு ஒப்பிட்டுநோக்கலாம்.

"மன்னவன் பணியன்றாகில் நும்
பணி மறுப்பனோ? என்
பின்னவன் பெற்ற செல்வம்
அடியனேன் பெற்றது அன்றோ?
என் இனி உறுதியப்பால்? இப்பணி
தலைமேல கொண்டேன்
மின் ஒளி கானம் இன்றே போகின்-
றேன்; விடையும் கொண்டேன்"

"பாராளும் படர் செல்வம்
பரதநம்பிக்கே யருளி
ஆராவன் பிளையவனோடு
அருங்கானமடைந்தவனே"

என்கிறார் குலசேகரர்.

ஸ்ரீராமன் கானகம் சென்ற பொழுது நாட்டிலுள்ள மக்கள் யாவரும் காட்டிற்குப் புறப்பட்டுச் சென்றனர். ஊரசசையாகக் கிடக்கும் தசரதர் போகவில்லை. அவர் பக்கத்திலிருந்த மூன்றுபட்ட மகிஷிகளும் போகவில்லை. மற்ற யாவரும் போய்விட்டனர் எனக்கூறும் கம்பன் சுவரிலிருந்த சித்திரங்கள் போகவில்லை என்கிறான்.

"ஏகிய குரிசில் பின் யாவரேகிலார்?
மாவியல் தானையம் மன்னை
நீங்கலாத
தேவிய ரொழிந்தனர்! தெய்வமாநகர்
ஓவியம் ஒழிந்தன!........

குலசேகரரும் "சுற்றமெல்லாம் பின்தொடர தொல்கானம் அடைந்தவனே" என்பர்.

குலசேகரர், வாலியைக் கொன்று அவனது தம்பியான சுக்ரீவனுக்கு ஸ்ரீராமன் அரசளித்ததை நினைவு கூறுகிறார்.

"வாலி வீழ முன்னோர்நாள் உரம்
பொதச்சரந்துரந்த
உம்பராளி" (திருச்சந்தவிருத்தம்-73

என்றும்,

"............................கழிசினத்த
வல்லாளன் வானரக்கோன்
வாலிமதன் அழித்த
வில்லாளன்...................."
(நான்முகன் திருவந்தாதி-85)

என்று திருமழிசையாழ்வாரும்,

"உருத்தெழுந்தவாலி மார்பில்
ஒரு கணை உருவவோட்டி"
(பெரியதிருமொழி 4.6.3)

என்று திருமங்கையாழ்வாரும் வாலி வதத்தை பேசியுள்ளனர். சுக்ரீவனுக்கு அரசளித்ததை,

"கருந்துடைத் தம்பிக்கு இன்பக்
கதிர்முடியரசு அளித்தாய்
(பெரியதிருமொழி 4.6.3)

என்று மங்கையர்கோன் பேசியுள்ளார். குலசேகரரும் "வாலியைக் கொன்று அரசு இளைய வானரத்துக்கு அளித்தவனே" என்பர்.

குலசேகரருக்கு ஸ்ரீராமன் ஸேதுபந்தனம் பண்ணி அரணையுடைத்தான லங்காபுரியை பாழ்படுத்தியதை எண்ணுகிறார்.

"குரக்கு இனத்தாலே குரைகடல்
தன்னை நெருக்கி அணை கட்டி"

என்று பெரியாழ்வாரும்,

"மாகடல் அரிகுலம் பணிசெய்ய
அருவரையணை கட்டி"
(பெரியதிருமொழி 1.2.2)

என்று கலியனும் ஸேதுபந்தனத்தை பேசியுள்ளனர். "மலையதனால் அணைகட்டி மதிள் இலங்கை அழித்தவனே" என்று ஸ்ரீராமனைப் போற்றுவார் குலசேகரர். இறுதியாக இராகவன் தன்னுடைய ஒப்பற்ற வில்லானது வளைய, அந்த வில்லாலே மதிள் இலங்கை அழித்தவன் என்று ஸ்ரீராமனின் வீரச்செயலில் ஈடுபடுகிறார் குலசேகரர்.

இதனையே,

"இலங்கை மலங்கச் சரந்
துரந்த வில்லாளன்"
(பெரியதிருமொழி 2.1.10)

என்று பெரியாழ்வாரும்,

"கடிமதிள் இலங்கை கலங்க
ஓர்வாளி தொட்டானை"
(பெரியதிருமொழி 4.3.6)

என்று மங்கையர்கோனும் ஸ்ரீராமனின் வீரச்செயலை அரு

ளிச்செய்துள்ளனர்.

"வளையவொரு சிலையதனால் மதிளிலங்கையழித்தவனே" என்பது குலசேகரர் வாக்கு.

மேலே குறிப்பிட்ட சில நிகழ்ச்சிகளைக் கூறி குலசேகரர இராகவனுக்குத் தாலாட்டுப் பாடுகிறார். குலசேகரர்க்குத் திருககண்ணபுரத்து சௌரிராஜன் ஸ்ரீராமராஜனாகக் காட்சி அளித்ததைக கண்டு தம்முடைய புதல்வனைத் தாலாட்டுவது போலவே தாலாட்டுகிறார்.

## "கணபுரத்து என் கருமணியே"

திருக்கண்ணபுரத்துச் சௌரிராஜன் குலசேகரருக்கு நீலரத்நம் போன்ற வடிவுடையனாகத தன் திருமேனியின் அழகைக் காட்டி ஈடுபடுத்துகிறான். குலசேகரரும் இவ்வடிவழகில் துவககுண்டு "கணபுரத்து என் கருமணியே" (1,2,3,4,6,7,8,9,10) ஆகிய பாடல்களில் பேசி மகிழ்கிறார். ரத்தனத்திற்கும் எம்பெருமானுக்கும் பலபடிகளில் ஒற்றுமை உண்டு. இது ஈண்டு விவரிக்கப்படுகிறது.

1. ரத்தனமானது தன்னைப் பெற்றவர்களையும், பெற விருப்பமுடையவர்களையும் இரவும், பகலும் கண்ணுறங்க ஒட்டாது. ரத்னம் என்பது மிகச் சீரியபொருள். அதைச் சேகரிக்கவேண்டிய காலத்தில் அதுவே சிந்தையாக கண்ணுறங்காது, அதை அடைந்தபின் அதனைக் காப்பதற்காகக் கண்ணுறங்காது.

எம்பெருமானைப் பெற நினைப்பவர்கள் கண்ணுறங்க மாட்டார்கள். "கண்ணுரக் கண்டு கழிவதோர் காதலுற்றூர்க்கு முண்டோ கண்கள் துஞ்சுதலே" என்பர் நம்மாழ்வார்.

எம்பெருமானைப் பெற்ற நித்யர்களும் முக்தர்களும் இமையாத கண்ணினராய் கண்துஞ்சாமே காப்பிடுவார்கள். "உறகலுறகலுரகல் ஒண்சுடராழியே சங்கே" என்பர் பெரியாழ்வார்.

2. ரத்னமானது 'எவ்வளவு விலையுயர்ந்ததாயினும் தலைப்பில் முடிந்து ஆளலாம்படி அடங்கியிருக்கும்.

எம்பெருமானும் எவ்வளவு மேன்மை பொலிய நிற்பவனாயினும் பக்தர்களுக்கு அடிமைப் பட்டிருப்பான். "பத்துடையடிவர்க்கெளியவன்" என்கிற நம்மாழ்வாரின் அருளிச்செயலின் படி பகவான் பக்தர்களுக்கு எளியவனாக பரம விதேயனாக இருப்பான்.

3. ரத்னமானது கடல், மலை முதலிய இடங்களில் கிடைக்கும். கடலுக்கு ரத்நாகரமென்றே பெயர். அங்கு ரத்னம் கிடைகக்கும். மலையில் ரத்னம் கிடைக்கும் என்பதை "ஊரும் வரியரவமொண்குறவர் மால் யானைபேரவெறிந்த பெருமணியை" என்று பொய்கையாழ்வார் கூறுகிறார்.

எம்பெருமானும் திருப்பாற்கடலிலும், திருவேங்கடம், திருமாலிருஞ்சோலை முதலான மலைகளிலும் விளங்குவன். "மலைமேல் நிற்பாய் கடல்சேர்ப்பாய்" என்பர் நம்மாழ்வார்.

4. ரத்னமானது இடையில் ஒருபுருஷனைக் கொண்டு வாங்கப்பெறும். அவனுக்குத் தரகன் என்று பெயர். சிபார்சு செய்வது அவனது வேலை.

எம்பெருமானும் புருஷகார முகமாகவே பெறப்படுவன். "வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமாள் திருப்பாதம் பணிந்து" என்பர் நம்மாழ்வார்.

5. ரத்னமானது ஒளியால் மேன்மைபெறும். ஒளிமிக்க ரத்னத்திற்கே அதிக மதிப்புண்டு.

எம்பெருமானும் பிராட்டியினால் பெருமேன்மை பெறுகின்றான். "திருவில்லாத்தேவரைத் தேறேல்மின்தேவு" என்கிறார் திருமழிசையாழ்வார்.

6. ஒருவனிடம் ரத்னம் இருந்தால் பலரும் அவனை அண்டியிருப்பார்கள்.

எம்பெருமானும் தன்னடியார்களை எல்லோரும் அண்டியிருக்கும்படி செய்வான். பகவானைக் கொண்ட மகான்களை உலகம் அனுவர்த்திக்கும்.

7. ரத்னமானது தன்னையுடையவனை செருக்குற்றிருக்கச் செய்யும்; மார்புநெறிக்கப்பண்ணும்.

எம்பெருமானும் தன்னையுடையவர்களை "எனக்காரும் நிகரில்லையே" "மாறுளதோவிம்மண்ணின் மிசையே" "எனக்கென்னினி வேண்டுவதே" என்று மார்பு நெறிக்கப்பண்ணுமவன்.

8. ரத்னமானது தன்னையிழந்தவனைக் கதறிக் கதறியழப்பண்ணும் ஸ்ரீராமரத்தனத்தையிழந்த பரதாழ்வான் "வில்லாப ஸபா மத்யே" என்று ஸபையில் புரண்டு அழுதான். ஸ்ரீக்ருஷ்ண ரத்னத்தை இழந்த தேவகி "எழில்கொள் நின்திருக்கண்ணிணை நோக்கந்தன்னையுமிழந்தேனிழந்தேனே" என்றும் "இன்பத்தை யிழந்த பாவியேனெதாவிநில்லாதே" என்றும் தெய்வத்தேவகி புலம்பிய புலம்

பலால் அறியலாம். ஆராவ முதனை அனுபவிக்கப் புகுந்த நம்மாழ்வார "உனனைக கானா பான் நான அலப்பாய் ஆகா யத்தை நோககியழுவன்" என்று கதறுகிறுர்.

9. ரத்னமானது ஒளியை விட்டிராது. எம்பெருமானும் பிராட்டியை விட்டிரான்.

### திருக்கண்ணபுரத்தரசே

குலசேகரர ஸ்ரீசௌரிராஜனை "திருக்கண்ணபுரத்தின் அரசனா' கக் காண்கிறுர். பெரியாழ் வார் "எங்கள் குடிக்கரசே" என் றும், தொண்டரடிப்பொடியாழ் வார் "அயோத்தி எம் அரசே' என்றும், நம்மாழ்வார் "பாரளந்த பேரரசே!எம் விசும்பரசே! எம்மை நீத்து வஞ்சித்த ஓரரசே" என் றும் பகவானைப் போற்றுகிறுர். அரசனுக்கும் எம்பெருமானுக்கும் சில ஒற்றுமைகள் உண்டு.

1. அரசன் பகற்பொழுதில் பரிஜந பரிவார ஸேவிதனாய்க் கொண்டு சிங்காசனத்தில் வீற் றிருப்பன். எம்பெருமான் இருள் கலசாத பகலான பரமபதத்தில் நித்யமுக்தர்கள் ஸேவிதனாய் இருப்பவன்.

2. அரசன் இரவு நேரங்களில் பிறரறியாதபடி கறுப்பு உடுத்து நகர சோதனம் பண்ணுவன். எம்பெருமானும் "இவற்றுள் எங் கும் மறைந்துறைவாய்" என்கிற படி தான் பரந்து உறைகின்ற பொருள்களுக்குத் தெரியாதபடி நிற்பவன்.

3. அரசன் சிக்ஷைரக்ஷைக ளுக்காகத் தனித்திருந்தும் அந் தரங்களோடே கூடியும் கார் யங்கள் செய்வான். எம்பெரு மானும் ஆத்மாக்களைக் காப் பாற்றும் வழியைச் சிந்தித் திருப்பான். வாசுதேவ, ஸங் கர்ஷண, ப்ரத்யும்ந, அநிருத்த ரூபங்களோடு உறங்குவான் போல் யோகு செய்வான.

4. அரசன் துஷ்ட மிரு கங்களை வேட்டையாடுவான். எம்பெருமானும் காட்டை நாடி களிறும் புள்ளும் உடன்மடிய வேட்டையாடி வருவான்.

5. அரசன் வேட்டையாடின களைப்பு நீங்க பூந்தோட்டங்க ளில விளையாடுவான். எம்பெரு மானும் "ஆராமம் சூழ்ந்த அரங் கங்களில் விளையாடுவான்."

### இளையவர்கட்கு அருளுடையாய்

குலசேகரர் ஸ்ரீராமனை இளையவர்கள் விஷயத்தில் கரு ணையுடையவன் என்று போற் றுகிறுர். வாலியைக் கொன்று சுக்ரீவனுக்கு அருள் புரிந்த வன் ஸ்ரீராமன். இராவ ணனை வதைத்து இளையவ னான விபீஷணனுக்கு அருள்பு ரிந்தவன் ஸ்ரீராமன்.

### அற்றவர்கட்கு அருமருந்தே

குலசேகரர் சௌரிப்பெரு மாளை "உனக்கே அற்றுத் தீர்ந்த பரமபக்தர்களுக்கு ஸம் ஸார ரோகக்தைத் தணிக்க அருமையான மருந்து போன்ற வனே" என்று புகழ்ந்து பேசு கிறுர்.

உடல் மருத்துவர்கள் பலர்; உயிர் மருத்துவன் ஒருவனே என்பது குலசேகரர் கணிப்பு. "மருத்துவனாய் நின்ற மாமணி வண்ணு" என்கிறுர் பெரியாழ் வார். "வைத்யோ நாராயணோ ஹரி:" என்கிறுர்கள் வைதிகர் கள். ஸஹஸ்ரநாமத்தில் "நிர்வா ணம் பேஷஜம் பிஷக்" என்று பகவான் மருத்துவனாக பேசப் படுகிறுன்.

உடல் மருததுவன் மருந்து கொடுத்து அதற்குப் பணம் வாங்குகிறுன். ஆனால் உயிர் மருத்துவன் தானே மருந்து மாயிருப்பவன். "மருந்தும் பொருளுமமுதமுந்தானே" என்கி றுர் பேயாழ்வார். "நிர்வாணம் பேஷஜம்" என்கிறது ஸஹஸ்ர நாமம். "மருநதேநங்கள் போக மகிழ்ச்சிக்கு" எனபர் நம்மாழ் வார். உலகில் நோயாளிகளை நோக்கி "யார் வைத்யர்? எது மருந்து? என்று கேட்பார்கள். 'யார் மருந்து?' என்று ஒரு வரும் கேட்பதில்லை. ஆனால் நம்மாழ்வார் 'ஆர்மருந்தினியாகு வார்?' என்கிறுர். எம்பெரு மானே மருத்துவனும் மருந்து மாயிருப்பவன் என்பது ஆழ் வார்களின் சித்தாந்தம் . அது போலே குலசேகரரும் "அற்றவர் கட்கு அருமருந்தே" என்கிறுர்.

### இன்னமுதன்

குலசேகரர் "என்னுடைய இன் அமுதே" என்றும் "எங்கள் குலத் தின்னமுதே" என்றும் சௌரிப் பெருமாளைப் போற்றுகிறுர். நம்மாழ்வார் "சீரார் செந் நெற்கவரிவீசுஞ் செழுநீர்த் திருக்குடந்தை ஆராவமுதே" என்று திருக்குடந்தைப்பெரு மானை அமுதமாகக் கண் டார். திருப்பாணுழ்வார் "அண் டர் கோனணியரங்கனென்ன முது" என்று திருவரங் கனை அமுதமாகக் கண்டார். "அடியேன் மேவியமர்கின்றவ முதே...... திருவேங்கடத்தெம் பெருமாளே" என்பது நம்மாழ் வார் திருவேங்கடத்தில் கண் டவமுதம். "எனக்குத்தேனே பாலேகன்னலே யமுதே திருமா லிருஞ்சோலைக்கோனே" என்று நம்மாழ்வார் தாமே தெற் குத் திருமலையிற்கண்டவமு தம். "மன்னு குறுங்குடி யாய் வெள்ளறையாய் மதிள்

சூழ்சோலை மலைக்கரசே! கண்ணபுரத்தமுதே" என்று பெரியாழ்வார் திருக்கண்ணபுரத்தில் கண்டவமுதம் போல், குலசேகரரும் சௌரிப்பெருமாளை அமுதமாக அனுபவிக்கிறார்.

### அலைகடலைக் கடந்து அமரர்க்கு அமுதருளிச் செய்தவன்

ஸ்ரீராமாவதார செயல்களைப் பேசி வந்த குலசேகரர் பரந்தாமன் பாற்கடலை கடைந்த வரலாற்றையும் கூறுவார். ஸ்ரீராமன் கடலை அணை செய்து திருமாமகளை பெறுதற்கானாற்போலே, பகவான் கடலைக் கடந்ததும் திருமாமகளைப் பெறுவதற்கு என்பது அவரின் அபிப்பிராயம் போலும். திருமங்கையாழ்வார்,

**"அண்ணல்செய்து அலைகடல்**
**கடைந்து அதனுள்**
**கண்ணுதல் நஞ்சுணக்**
**கண்டவனே**
**விண்ணவரமுதுண அமுதில் வரும்**
**பெண்ணமுதுண்ட வெம்பெருமானே"**

என்று அருளிச்செய்ததை இங்கு நினைக்கத்தகும்.

### புவனம் படைத்தவன்

குலசேகரர் எம்பெருமானுடைய படைப்புத்தொழிலில் ஈடுபடுகிறார். எம்பெருமான் தன் திருநாபியில் அலர்ந்த தாமரைப் பூவின் மேல் பிரமனைத்தோற்றுவித்து அவன்முகமாக உலகங்களை படைத்தவன். "உய்ய உலகு படைக்கவேண்டி உந்தியில் தோற்றினாய் நான்முகனை" என்பர். குலசேகரரும் "புண்டரிக மலரதன் மேல் புவனியல்லாம் படைத்தவனே" என்கிறார். மேலும் தேவர்களையும் அசுரர்களையும் திக்குகளையும் படைத்தவன் பகவான் என்று கூறுவார் குலசேகரர்.

### ஆலினிலைப் பாலகனாய் அன்றுலக முண்டவனே.

குலசேகரருக்கு எம்பெருமான் முன்பு பிரளயம் வந்தபோது, ஓர் ஆலந்தளிரிலே குழந்தை வடிவாய்க்கொண்டு உலகங்களை திருவயிற்றில் வைத்து நோக்கினவன் என்கிற எண்ணம் ஏற்படுகிறது.

### 'யாவரும் வந்து அடிவணங்க அரங்கநகர்த்துயின்றவனே'

ஸ்ரீவைணவமரபின்படி திருவரங்கத்தை மேல்வீடு என்றும் திருக்கண்ணபுரத்தை கீழ் வீடு என்றும் கூறுவர். "மன்னுடைய விபீடணற்கா மதிளிலங்கைத் திசை நோக்கி மலர்க் கண் வைத்த என்னுடைய திருவரங்கர்" என்பர் பெரியாழ்வார். அத்தகைய பெருமை பொருந்திய விபீஷணன் அரங்கனிடம் சென்று "பொன்னிசூழ் திருவரங்கா! ரிஷபத்தினுடைய செருக்கும் மத்தகஜத்தினுடைய மதிப்பும், புலியினுடைய சிவிட்டும், சிங்கத்தின் பிறரையடக்கும் பெருமையும் தோற்ற உமது நடையழகு காணவேண்டும்" என்று வேண்டினார். திருவரங்கர் "செல்வ விபீடணா! எனது கீழைவீட்டுக்கு வந்தால் காணலாம்" என்றார். இதனால் இன்றும் பிரதி அமாவாசைதோறும் விபீஷணனுக்காக சௌரிப்பெருமாள் கைத்தல சேவையில் நடையழகு காட்டுகிறார். குலசேகரரும் திருக்கண்ணபுரத்தையும் திருவரங்கத்தையும் அனுபவித்துப் பேசுகிறார். "தென்னாடும் வடநாடும் தொழநின்ற திருவரங்கம்" என்பர் பெரியாழ்வார் என்பதை இங்கு நினைவுகூறலாம்.

### திருக்கண்ணபுரத்தை வருணித்தல்

ஸ்ரீசௌரி ராஜப்பெருமாள் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருப்பதியின் பெருமைகளை குலசேகரர் பேசி மகிழ்கிறார். "கன்னிநன்மாமதிள் புடைசூழ கணபுரம்" என்றும், "கங்கையிலும் தீர்த்தமலிகணபுரம்" என்றும், "காமரங்கள் இசைபாடும் கணபுரம்" என்றும், "காலின் மணி கரையலைக்கும் கணபுரம்" என்றும் "களைகழுநீர் மருங்க லரும்கணபுரம்" என்றும் "காவிரிநல்நதிபாயும் கணபுரம்" என்றும் திருக்கண்ணபுரத்தின் நீர்வள, நிலவளங்களை குலசேகரர் காட்டுகிறார்.

இப்பதியில் ஞானிகளும், ஸகல சாஸ்த்ரங்களை அறிந்தவர்களும் வாழ்கிறார்கள் என்பதை "கற்றவர்கள் தாம் வாழும் கணபுரம்" என்றும், "கலைவலவர்தாம் வாழும் கணபுரம்" என்று குறிப்பிடுவர் குலசேகரர். இப்பதி சேவித்தவர்கள் தங்கள் மனதை தாங்களே இசைந்து கொடுப்பதற்கு தகுந்த இடம்.

குலசேகரர் தன்னை "கொள்நவிலும் வேல் வலவன் குடைக் குலசேகரன்" என்று பேசிக் கொள்வர்.

காகுத்தன் தன்னடிமேல் தாலேலோவென்றுரைத்த தமிழ் மாலையைக் கற்றவர்கள் நல்ல பக்திமான்களாகத் திகழ்வார்கள் என்று பலன் உரைத்து தலைக் கட்டுகிறார் குலசேகரர்.

குலசேகராழ்வார் திருவடிகளே சரணம்.



(தொடர் கட்டுரை)

# முமுட்சுப்படி

திரு. மாருதிதாஸன் - காஞ்சிபுரம்.

மூலம் : 88

" 'தொலைவில்லி மங்கலம் தொழும்' என்கையாலே ஸ்வரூபம் சொல்லிற்று; 'வேங்கடத்துறைவார்க்கு நம:' என்கையாலே உபாயம் சொல்லிற்று; 'அந்தி தொழும் சொல்' என் கையாலே பலம் சொல்லிற்று."

1) பிரணவத்தில் சொரூபம் சொல்லப்படுவதைப் போலவே, நமப்பதத்திலும் இந்தச் சொரூபம் சொல்லப்படுகிறது என்பதனை விளக்குக.

பகவானுக்குக் கைங்கர்யம் செய்யும் ஆன்ம சொரூபம் பற்றிப் பிரணவத்தில் சொல்லப்படுகிறது. பகவானுக்குச் செய்வதைப் போலவே, பாகவதர்களுக்குத் தொண்டு செய்வது பற்றியும் பிரணவத்தால் உணரலாம்.

அடியவனாக இருந்து தொண்டு செய்யும் ஆன்ம சொரூபம் உள்ளபடியே வெளிப்படவேண்டுமானால், அகங்கார மமகாரங்கள் முதலில் நீங்குதல் வேண்டும்.

அகங்கார மமகாரங்களாகிற பகைகள் நீங்குகிற இடமாகிய நம்ப் பதத்திலேயே ஆன்ம சொரூபம் நன்கு விளக்கம் பெறும்.

2) இதற்குச் சான்றாக ஆழ்வார் பாசுரம் ஒன்றைக் காட்டி விளக்குக.

"துவளில் மாமணி மாட மோங்கு
**தொலைவில் லிமங்க லம்தொழும்**
**இவளை நீர்இனி அன்னை மீர்!உமக்**
**காசை யில்லை விடுமினோ!**
**தவள் வொண்சங்கு சக்கர மென்றும்**
**தாம ரைத்தடங்க கணென்றும்**
**குவளை யொண்மலர்க் கண்கள்**
**நீர்மல்க**
நின்று நின்று குமுறுமே!"

தலைவியின் நிலையைத் தாயாரிடம் தோழி சொல்லுவதாக அமைந்தது இப்பாசுரம்.

குற்றமற்ற சிறந்த மணிகள் பதிக்கப்பெற்ற மாடங்கள் உயர்ந்து காணப்படும் தலமாகிய தொலைவில்லி மங்கலம் என்னும் திருநகரை இவள் தொழுகிறாள் என்பது பாசுரக் கருத்து.

பரம்பொருளை வணங்குவது



என்பது ஒருவகைப் பக்தி. ஆனால், தலைவியானவளோ பரம்பொருள் உவந்து திருக்கோயில் கொண்டிருக்கும் திருத்தலத்தை தொழுது அத்தலத்திற்கும் அடிமைப் பட்டிருக்கிறாள் என்னும் கருத்தும் இப்பாசுரத்தில் விளங்குகிறது.

எனவே, 'தொழும்' எனும் சொல் அடிமை செய்யும் ஆன்ம சொரூபமாகிய ஆழ்வார் நிலையைக் குறிப்பதனைக் கண்டு மகிழலாம்.

3) நமப்பதத்தில் உபாயம் சொல்லப்படுகிறது என்பது எங்ஙனம்?

துன்பம் நீங்கி இன்பமாக இருப்பதற்கு என்ன செயலைச் செய்யவேண்டுமோ, அச்செயலில் தொடர்பு அற்று இருத்தல் என்பதே நம: என்னும் பதத்தின் சாரமான பொருளாகும். இவ்வாறிருத்தல் பாரதந்திரிய நிலை' எனப்படும்.

பாரதந்திரிய நிலையைக் கைக்கொண்டு ஒழுகுபவனுக்கு ஈசுவரனே உபாயப்பொருள் ஆகின்றான். இந்த நிலையில் நம: என்பது உபாயப் பொருள் ஆகிறது என அறியலாம்.

4) "வேங்கடத்துறைவார்க்கு நம: என்கையாலே உபாயம் சொல்லிற்று" என்பதனை விளக்குக.

வேங்க டங்கள்மெய்ம் மேல்வினை
முற்றவும்
தாங்கள் தங்கட்கு நல்லன
வேசெய்வார்
வேங்க டத்துறை வார்க்கு
நமவென்ன
லாம்க டமைவ துசுமந் தார்கட்கே.

என்பது நம்மாழ்வார் திருவாய்மொழி.

மூன்றும் திருமொழியில் மூன்றும் பத்தில் ஆறுவதாக அமைந்துள்ளது இப்பாசுரம். உபாயமாவதற்கு இப்பாசுரம் தடையில்லை.

அடியவன் தன் அடிமைத் தொழிலைச் செய்யும்போது "அடியேன் திருவேங்கடத் துறையும் எம்பெருமானுக்கே உரியவனல்லாமல், எனக்கு நான் உரியேன் அல்லன்" என்று தன்னுடைய பாரதந்திரிய நிலையை நினைத்தே அவ்வடிமைத் தொழிலைச் செய்கிறான்.

இவ்வாறு நினையாமல் எளிமை வாய்ந்ததும், தன்னால் அடையத்தக்கப் பொருளாக உள்ளதுமான நம: என்பதைச் சொல்லளவில் சொல்லினும் அதை எம்பெருமான் தன் பெருமைக்கேற்ப இவ்வடியவன் பெரிய கைங்கர்யம் செய்து விட்டதாகவே மகிழ்கிறான்.

இதனால், நம: என்னும் பதத்தைச் சொல்லியவனின் முன்வினை அழிகிறது; பின்வினை ஒட்டாமல் போய்விடுகிறது.

நம: என்பது உபாயப் பொருளாதலை இப்பாசுரம் இவ்வாறு எடுத்து இயம்புகிறது.

5) நமப்பதம் பயனையும் சொல்லுகிறது என்பது எங்ஙனம்?

பகவானுக்குச் செய்யும் கைங்கர்யம் தன் நன்மைக்கென எண்ணாமல் பகவானின் உவப்புக்காகவே என்று கருதிச் செய்ய வேண்டும்.

இவ்வாறு செய்யும்போது நம: என்பது தன் நன்மைக்கே என்பதனை நீக்குகிறது. அவ்வகையில் பகவானுடைய முகமலர்த்தியைக் காட்டுவது கைங்கர்யமே என்பது கருத்தாகிறது. இதனால் நம: என்பது பயனையும் சொல்லுகிறது என்பதனையும் அறியலாம்.

6) இக்கருத்துக்கு ஆதரவான ஆழ்வார் பாசுரம் ஒன்றை விளக்குக.

"உண்டு களித்தேற் கும்பர்என்
குறைமேலைத்
தொண்டு உகளித்துஅந்தி
தொழும்சொல்லுப் பெற்றேன்
வண்டு களிக்கும் பொழில்சூழ்
திருப்பேரான்
கண்டு களிப்பக் கண்ணுள்நின்
றகலானே!"

என்பது நம்மாழ்வார் திருவாய்மொழி.

இதில் 'அந்தி தொழும் சொல்', 'அந்தி' என்பவற்றைச் சொரூப ஞானமானது முதிர்ந்தநிலை என்று கொள்ளவேண்டும். இவ்வாறு பொருள் கொண்டால், சொரூப ஞானமானது முதிர்ந்த நிலையில் பகவானைத் தொழும்போது அவன் முகமலர்த்திக்குச் செய்யும் செயல்கள் ஆன்மாவிற்குப் பயனாதலை அறியலாம்.

## மூலம் : 89

" 'உற்றதும் உன்னடியார்க்கடிமை' என்கிறபடியே, இதிலே பாகவத சேஷத்துவமும் அநுஸந்தேயம்".

1) இந்நமப்பதம் பாகவத கைங்கர்யம் பற்றியும் தெளிவுபடுத்துகிறதா?

ஆம். பகவானுக்கு ஆன்மா அடிமைப்படுதல் இயல்பு. அதுபோலவே, பகவானுடைய கைங்கர்யத்துக்கு எல்லையாக விளங்கும் பாகவத கைங்கர்யமும், கடைப்பிடிக்க வேண்டும் என்பது நமப்பதத்தால் உணர்த்தப்படுகிறது.

எட்டெழுத்தோடும் கூடிய திரு

மந்திரம் கற்றதால் நான் பெற்றபேறு, 'உன்னடியார்க்கடிமை' என்பதே ஆகும் என்று திருமங்கையாழ்வார் திருவாய் மலர்ந்தருளுகிறார்.

2) *"உற்றதும் உன்னடியார்க்கடிமை" என்னும் தொடர் அமைந்த பாசுரத்தை எடுத்துக்காட்டுக.*

"மற்றும்ஓர் தெய்வம் உளதென்னிருப்பாரோடு
உற்றிலேன் உற்றதும் உன்னடியார்க்கடிமை
மற்றெல்லாம் பேசிலும் நின்திருஎட்டெழுத்தும்
கற்றுநான் கண்ணபுரத்துறையம்மானே!

பெரியதிருமொழி (8-10-3)

3) *பகவத் கைங்கர்யத்துக்கு எல்லைநிலமான பாகவத கைங்கர்யமும் இந்நமப் பதத்திலேயே தெளிவாக விளங்குகிறது என்று அருளிச்செய்யும் பிள்ளையுலகாசிரியர் கருத்துக்கு உலக நடையிலிருந்து சான்று தருக.*

அன்புடன் தங்களுக்குத் தொண்டு செய்வதைக் காட்டிலும், தங்கள் குழந்தைகளுக்குப் பிறர் செய்யும் அன்பான தொண்டினையே உயர்ந்த நிலையில் உள்ளவர்கள் விரும்புவார்கள்.

அதுபோலவே, பகவானும் அன்புடையோர் தனக்குத் தொண்டு செய்யும் போது மகிழ்வடைதலைக் காட்டிலும், தன்னடியார்களுக்குப் பிறர் தொண்டு செய்வதைக் காணும் போதுதான் பெரிதும் மகிழ்ச்சியடைகிறான்.

எனவே, இப்பாகவத கைங்கர்யமே நமப்பதத்தில் தோன்றும் உட்பொருள் என்றும், உயிர்நிலை என்றும் கொள்ளுதல் வேண்டும்.

4) *பாகவத கைங்கர்யத்தையே ஆழ்வார்களும் ஆழமாகச் சிந்தித்துள்ளனர் என்பதற்குச் சான்று காட்டுக.*

"அடியார்ந்த வையம்உண்டு
ஆலிலை அன்ன வசஞ்செய்யும்
படியாது மில்குழ விப்படி யெந்தைபிரான்தனக்கு
அடியார் அடியார் தம்அடியார்அடி யார்தமக்
கடியார் அடியார் தம்அடி
யார்அடி யோங்களே!"

என்பது நம்மாழ்வார் திருவாய்மொழி.

இப்பாசுரத்தில் அடியார்க்கு அடியாராக இருத்தலே பெருமைக்குரியது என்பதை நம்மாழ்வார் அற்புதமாக விளக்குகிறார்.

பிரளய காலத்தில் உலகங்களையெல்லாம் உண்டு, ஓர் ஆல் இலையில் கண்வளர்ந்து, ஒப்பில்லாத. சின்னஞ்சிறு பாலகனாக உள்ள எங்கள் பெருமானுக்கு, 'அடியார்க்கு அடியார் அவ்வடியார்க்கு அடியார்' என்னும் முறையில் இறுதியடியாராக விளங்கும் அடியார்க்கு நாங்கள் அடியார்கள் என்று நம்மாழ்வார் தம் திருவாய்மொழியில் அடியவராய் இருக்கும் தன்மையின் சிறப்பை அருளிச் செய்கிறார்.

மேலும், 'நின் திருவெட்டெழுத்தும் கற்று உற்றதும் உன்னடியார்க்கடிமை' செய்வதற்காகவே என்று திருமங்கையாழ்வார் அருளிச்செய்கிறார்.

"தேவு மற்றறியேன் குருகூர் நம்பி பாவின் இன்னிசை பாடித் திரிவனே" என்று பரம பாகவதரான மதுரகவியாழ்வார் தம் வாழ்நாள் முழுவதும் நம்மாழ்வாரையே தெய்வமாகக் கருதி, அவருக்குத் தொண்டு செய்து வந்தார். இவர் இயற்றியருளிய 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்னும் பிரபந்தம் நமப்பதத்தின் பொருளையே காட்டுகிறது என்பர் ஞானியர்!

மூலம் : 90

"இது அகாரத்திலே என்றுஞ் சொல்லுவர்கள்; உகாரத்திலே என்றுஞ் சொல்லுவர்கள்".

1) *பாகவத கைங்கர்யம் என்பது நமப்பதத்தில் மட்டுமன்றி மற்றைய பதங்களிலும் சொல்லப்படுகிறதா?*

பாகவத கைங்கர்யம் என்பது நமப்பதத்தால் மட்டுமன்றி அகாரத்தால் கிடைக்கிறதென்று சிலரும், உகாரத்தால் கிடைக்கிறதென்று சிலரும் சொல்லுகின்றனர்.

2) *பாகவத சேஷத்வம் என்பது அகாரத்தாலும் கிடைக்கிறது என்பது எங்ஙனம்?*

அடியார்க்குக் கைங்கர்யம் செய்தல் என்பது பகவானுக்கு அடிமை பூண்டொழுகும் தன்மையைச் சொல்லுகிற அகாரத்தில் புணர்ந்து கெட்ட வேற்றுமையால் கிடைக்கிறது என்று சிலர் சொல்லுகின்றனர்.

ஒருபொருள் ஒருவனுக்குச் சொந்தமுடையதாய் இருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். அவன் அந்தப் பொருள் மீது அனுபவித்தல், விற்றல், தானம் செய்தல் முதலான எல்லா வகையிலும் சொந்தம் கொண்டாடலாம்.

அவ்வாறு தன்னுடைய எல்லாவிருப்பங்களுக்கேற்பவும் அப்

பொருளினை அவன் அனுபவிக்கும்போதுதான் அப்பொருள் அவனுக்கு முழுவதும் சொந்தமாகிறது.

அதுபோலவே, பகவானுடைய சொத்தாக உடைமைப் பொருளாக இருக்கும் சீவான்மாவானது தன்னைப் பகவானுக்கும் பாகவதர்களுக்கும் முழுமையாக உரிமையாக்கும்போது தான் சீவான்மாவின் அடிமைத் தன்மை பூர்த்தி பெறுகிறது.

இவ்வாறு விளக்கங்கூறி அகாரத்திலும் பாகவத சேஷத்வம் உள்ளது என்பர் சிலர்.

3) **உகாரத்திலும் பாகவத சேஷத்துவம் உள்ளது என்பார் கூற்றை எடுத்துக்காட்டுக.**

சேதனன் மற்றவருக்கு அடிமைப்பட்டவன் அல்லன்; பகவான் ஒருவனுக்கே அடிமைப் பட்டவன் என்பது உகாரத்தின் பொருள் என்பது தெளிவு.

அப்படியிருக்க, சேதனன் ஆண்டவனுக்கு மட்டுமன்றி அடியவருக்கும் அடிமைப்பட்டவன் என்னும் பொருளை உகாரம் எவ்வாறு தெரிவிக்கிறது என்பதற்குச் சிலர் கூறும் கருத்தினைக் காண்போம்.

நறுமணம் என்னும் தொடரை எடுத்துக் கொள்வோம். இதில் நறு, மணம் என்று இரண்டு சொற்கள் உள்ளன.

நறு என்பது நல்லது என்னும் பொருளைத்தரும். மணம் என்பது வாசனை. வாசனையைப் போன்றது சீவனுடைய அடிமைத்தன்மை.

வாசனையின் தன்மையாக உள்ளது நன்மை. வாசனையின் நல்ல தன்மையைப் போன்றதே சீவன் பிறருக்கு உரியவனாக இல்லாமல் பகவானுக்கு மட்டுமே உரியவனாயிருத்தல். பிறர் என்று இங்குக் குறிக்கப் படுவது அடியவர்கள் அல்லாத மற்றவரையே குறிக்கும் என்று உணர்தல் வேண்டும். அப்படி, உணர்ந்தால் சீவான்மாவானது பகவானுக்கு அடிமைப்பட்டிருக்கும் தன்மையைப் பெற்றிருத்தல் போலவே பாகவத கைங்கர்யத்துக்கும் உரித்தாய் உள்ளது என்று உணர்கிறோம்.

இவ்வாறு உகாரம் பாகவத சேஷத்வத்தையும் உணர்த்துகிறது என்றும் சிலர் சொல்லுவர்.

4) **அப்படியாயின் பிள்ளை உலகாசிரியர் உள்ளக்கிடக்கையாது?**

அகாரத்திலும் உகாரத்திலும் பாகவத சேஷத்தவம் கிடைக்கிறது என்பதை ஆசிரியர் ஏற்றுக்கொள்ளவில்லை.

நமப்பதத்திலேயே பாகவத சேஷத்தவம் சொல்லப்படுதல் மிகவும் சிறப்புடையதென்று ஆசிரியர் கருதுகிறுர்.

அகங்கார மமகாரங்கள் நீங்கப்பெருத ஒருவன் தன்னைப் போலவே உண்டும் உடுத்தும் உறங்கியும் காணப்படும் அடியார்களுக்குத் தான் ஏன் அடிமைப்படவேண்டும் என்று எண்ணுதலும் கூடுமன்றே?

இந்நிலையில் அவனுடைய அகங்கார மமகாரங்கள் நீங்காதன்றே!

எனவேதான், அகங்கார மமகாரங்கள் நீங்கும் நமப்பதத்திலேயே பாகவத சேஷத்வம் சொல்லப்படுவது சிறப்புடையது என்று ஆசிரியர் கருதுகிறுர்.

(தொடரும்)



முருகப்பெருமானின் திருமுகங்கள் ஆறு. அந்த ஆறுமுகங்களில் ஒவ்வொன்றும் எந்தந்த பக்கம் பார்த்துக்கொண்டிருக்கின்றன என்பதை காண்போம்.

| | |
|---|---|
| ஈசான முகம் | - மேல்நோக்கியுள்ளது. |
| தத்புருஷ முகம் | - கிழக்கு நோக்கியுள்ளது. |
| சத்யோ ஜாதம் | - மேற்கு நோக்கியுள்ளது. |
| அகோரம் | - தெற்கு நோக்கியுள்ளது. |
| வாமதேவம் | - வடக்கு நோக்கியுள்ளது. |
| அதோ முகம் | - கீழ் நோக்கியுள்ளது. |

தகவல்: திருமதி. கமலவேணி தனபதி.

பக்தியின் இலட்சணத்தை ஆதிசங்கரர் தாம பாடிய "சிவானந்தலஹரி" யில் கீழக்கண்டவாறு குறிப்பிடுகிருர்.

"அழிஞ்சில எனற மரத்தின விதைகள் எப்படித தாய் மரததுடன் ஒட்டிக்கொளகிறதோ, ஊசி எப்படி காந்தத்தினால் இழுக்கப் படுகிறதோ, பதிவிரதை எப்படி தன் கணவனின் நினைவிலேயே ஆழ்ந்திருக்கிருளோ, கொடி எபபடி மரத்தைச் சுற்றித் தழுவுகிறதோ, நதி எபபடி கடலுடன் சென்று கலககிறதோ, அப்படியே இறைவனின் பாதாரவிநதங்களில் எப்பொழுதும மனத்தை லயிக்கவைப்பதுதான பக்தியாகும்" என்று கூறியுள்ளார்.

திரு. அ. காசி - அருப்புக்கோட்டை.

அண்மையில் சென்னை தி.நகர் தி.தி. தேவஸ்தான தகவல் நிலையத்தில் நடைபெற்ற 'சுப்ரபாத' இசைப்போட்டிப் பரிசளிப்பு விழாவின் போது தமிழக அரசின் வீட்டுவசதி வாரியத்துறை அமைச்சர திரு. எஸ். இரகுபதி அவர்கள பங்கேற்று உரையாற்றினார்.

## திரு. இரகுபதி

அமைச்சர், வீட்டுவசதி வாரியத்துறை, தமிழ்நாடு அரசு, சென்னை.

திருமலை-திருப்பதி தேவஸ்தானம் சார்பில் சென்னையிலுள்ள தேவஸ்தான தகவல் மையமும், ஆலோசனைக் குழுவும் கலந்து ஏற்பாடு செய்துள்ள இந்நிகழ்ச்சியில் நான் கலந்துகொள்வதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

இங்கே, போட்டிக்காக வைக்கப்பட்ட, ஆன்மீகத்தையும், இசையையும் சேர்த்து வளர்க்கக் கூடிய வெங்கடேஸ்வர சுப்ரபாதமும், ஸ்ரீ அன்னமாச்சார்ய கீர்த்தனைகளும் தமிழ், தெலுங்கு தெரிந்தவர்கள் மட்டுமின்றி கர்னாடக இசை தெரிந்த அனைவரையும், மற்றும் பாமர மக்களையும் கவர்ந்து இழுக்க கூடியது. மொழி பிறப்பதற்கு முன்பே இசை பிறந்தது என்பார்கள். இசை மனிதனது அறிவு வளர்ச்சிக்கும் உதவியாக அமைகிறது. இக்கீர்த்தனைகள் இசையோடுப் பாடப்படுவதால் பிரபலமடைந்து வருகின்றன.தமிழகத்திலேயே வாழ்ந்த சைவ, வைணவ பெரியோர்களின் தேவாராம், திருவாசகம், திருவெம்பாவை, திருப்பாவை போன்றபக்திப் பாடல்களை தமிழகக் கோயில்களில் நாள்தோறும் காலையிலும், மாலையிலும் ஒலிபரப்ப மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவி அவர்களின் அரசு ஏற்பாடு செய்யவுள்ளது. இதனால், ஆன்மீகமும், மன அமைதியும் ஏற்பட வாய்ப்புள்ளது.

தமிழ் இயல், இசை, நாடக மன்றத்தில் ஒரு அங்கமாக, ராக ஆராய்ச்சி மையம் என்னும் மையத்தில் உலகிலேயே முதன் முறையாகத் தொடங்கி, ராகங்களுக்கு உயிரினை இயக்கும் வல்லமை உள்ளது என்று ஆராய்ச்சி செய்யப்படுகிறது. உதாரணமாக, "ஆனந்த பைரவி" ராகம் மூலம் ரத்த அழுத்தத்தினையும் குறைத்துக் கட்டுப்படுத்தலாம் என்றும், "சங்கராபரணம்" ராகம் மூலம் ஐஸ்வர்யத்தையும், ஆனந்த சுகத்தையும் ஏற்படுத்தலாம் என்றும் ஆராய்ச்சி செய்யப்பட்டு வருகிறது. இசை மூலம் பயிரை அதிகம் வளரச்செய்யலாம் என்றும், பசுக்களுக்குப் பால் அதிகமாக சுரக்க செய்யலாம் என்றும் சிதம்பரம் அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சி செய்து முடிவு எடுக்கப்பட்டது. 'இசை' என்பது 'இசைவு' என்று பொருள் படும். ஆகவேதான், எல்லோராலும் ஏற்றுக்கொள்ள கூடியதாக இசை இருக்கின்றது. மறைந்த புரட்சித்தலைவர் கூட தான் சோர்வுற்று இருக்கும் நேரம், 'அச்சம் என்பது மடமையடா,' என்ற பாடலைக் கேட்டுப் புத்துணர்வு பெறுவார்கள் என்று கூறுவார்கள். 'நகுமோமு' கீர்த்தனையை, 'ஆபேரி ராக'த்தில் பாடுவதை மாண்புமிகு தமிழக முதலவர் டாக்டர புரட்சிததலைவி அதிகம் விரும்பி, அதனை ரசித்து உற்சாகப்படுவாரகள என்று கூறுவாரகள. ஆகவே, அனைவரது மனநிலையும மாற்றி, மகிழ்ச்சியுறச் செய்வது இசைதான்.

தமிழ்நாடு இயல், இசை நாடக மன்றம் பல்வேறுபட்ட இசைக் கலைஞர்களுக்கு ஆண்டுதோறும் 'கலைமாமணி' பட்டம் வழங்கி கவுரவிக்கிறது. இந்தியாவில் அனைவரும் வேதங்களையும், ஆகமங்களையும் கற்கலாம் என்று, அரசால் கல்லூரி ஒன்று நடைபெற உள்ளது தமிழகத்தில் மட்டும்தான். இதன்மூலம் அனைவரும் வேதஙகள் பயிலலாம் என்ற நிலையை உருவாக்கியுள்ளது இவ்வரசுதான். ஆகவே, ஆன்மீகம் என்பது அனைவருக்கும் பொது.

ஆழ்வார்கள், திருப்பதி மலையை திருவேங்கட மலை என்று கூறுவார்கள். ஆழ்வார்கள் எல்லோரும் மனமுருகி பாடியது திருவேங்கடமலையைத்தான்.குலசேகர ஆழ்வார், மறுபிறவியில் கல்லாய்ப் பிறந்தாலும்கூட திருமலையில்தான் பிறக்க வேண்டும் என்றும், மரமாக பிறந்தாலும் திருமலையில் தான் மரமாக பிறக்க வேண்டும் என்றும், மீனாகப் பிறந்தாலும் திருமலைக் குளத்தில் பிறக்கவேண்டும் என்றும் பாடி உள்ளார்கள். ஒரு கொலைக்காரனைகூட இசை மூலமாக திருத்தலாம் என்பது ஆதாரப்பூர்வமான உண்மை. இசையால் கோபத்தையும் குறைக்கலாம். கோள்கள் ஒன்றோடு ஒன்று மோதும் போதுதான் இசை பிறந்ததாகவும், பிறகு பூமி தோன்றி, உயிர்

கள தோன்றியதாகவும் விஞ்ஞான ஆராய்ச்சி கூறுகின்றது. 'ஓம்' என்னும் பிரணவ மந்திரம்தான உலகத்தின் முதல் மந்திரம் என்று ஆன்மீகம் கூறுகிறது. ஆகவே, உயிர்கள் பிறப்பதற்கு முன்பு இசைதான் பிறந்தது என்று விஞ்ஞானமும், ஆன்மீகமும் கூறுகின்றன. ஆகவேதான், இறைவனை இசையாகக் கண்டார்கள்.

"நாத விந்துலாதி நமோ, நமோ!
வேத மந்திர ரூபா நமோ, நமோ!"

என்று இறைவனை இசைமயமாகக் கண்டார்கள். எனவேதான், மணிவாசகர் இறைவனை 'ஏழு இசையாய், இசைப் பயனாய் இருப்பவனே' என்று பாடினார்கள்.

குழந்தைகள் இடது பக்கத்தில் அதிகம் பால்குடிப்பது, இதயத்துடிப்பின இசையின் மகிமையால்தான் என்று ஆராய்ச்சி மேற்கொள்ளப்பட்டது.

ஆகவே, இப்போட்டியிலே 300 பேர்களுக்கு அதிகமாக கலந்து கொண்டுள்ளதாக அறிகிறேன். பரிசு பெற்றவர்களுக்கு எனது பாராட்டுகளையும், பரிசு பெற முயற்சி செய்தவர்களுக்கும் எனது வாழ்த்துக்களையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

இம்மையம், இதை தவிர நவராத்திரி தனுர் மாத இசை விழாக்களையும், சொற்பொழிவுகளையும், பஜன்களையும் அடிக்கடி நடத்தி வருவது குறித்தும் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். இம்மையம் மேலும், மேலும் வளர்ச்சி பெற்று இன்னும் பல சிறப்பான பணிகளையும், ஆன்மீக நெறிகளையும் கடைபிடித்து மக்களுக்கு தொண்டாற்ற வேண்டும் என்றும் அன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

நன்றி! வணக்கம்!!

## ஆர்ஜித சேவைகள் நடத்தும் கிருஹஸ்தர்களுக்குச் சில ஆலோசனைகள்

சேவை அல்லது உத்ஸவம் நடத்தும் கிருஹஸ்தர் வேஷ்டியும மேல் துணியும் (உத்தரீயம்) மட்டுமே அணிதல் வேண்டும்.

வைகுண்டம 'க்யூ' கட்டிடத் தொகுதியிலிருந்து கோயிலுட் செல்ல வேண்டும். முகத்துவாரத்திலிருந்து நேரிடையாகச் செல்ல முடியாது.

கிருஹஸ்தர்களுக்கு வேண்டும் அளவுக்கு தத்யோதனம், புளியோதரை போன்ற அன்ன பிரஸாதங்கள் வழங்கப்படும். தேவை போக மீதி இருக்கும் அன்ன பிரஸாதங்கள், கிருஹஸ்தரின் அனுமதியுடன், யாத்திரிகர்களுக்கு இலவசமாக விநியோகிக்கப்படும்.

சேவை/உத்ஸவம் நடத்த விரும்பும் கிருஹஸ்தர், அதற்கான குறிப்பிட்ட தொகையை 'எக்ஸிக்யூட்டிவ் ஆபீஸர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி' எனும் பெயரில ஒரு டி.டி. மூலம் 60 நாட்களுக்கு முன்பேயே அனுப்புதல் வேண்டும். பிறகு பெயிஷ்கார் (திருமலை) அவர்களிடமிருந்து அத்தேதிக்கான மற்றும் உத்சவத்திற்கான ஒப்புதல் தாக்கீதனைப் பெறல்வேண்டும்.

ஒரு நாளுக்கு முன்பேயே திருமலைக் கிளை விஜயா வங்கியில் இதற்கான தொகையைச் செலுத்தலாம். அதுபோது சலானில் குறிப்பிடப்படும் சேவை/உஸ்தவத் தேதியே, அவ்வுத்ஸவம் நடைபெறும் தேதியாகும்.

**பிரஸாதம் பெறவேண்டிய முறை :**

தொகையை விஜயா வங்கியில் செலுத்தியிருந்தால், அந்த் வங்கி சலானிலேயே பிரஸாதத்தினைப் பற்றிய குறிப்பு கொடுக்கப்பட்டிருக்கும். அந்தச் சலானின் ஒரு நகலினை அன்னபிரஸாத இலவச கௌண்டரில் அல்லது வகபடியில் (கோயிலின் பணியார விற்பனைக் கௌண்டரில்) செலுத்தி, பிரஸாதங்களைப் பெற்றுக் கொள்ளலாம்.

டி.டி. மூலம் தொகை செலுத்தப்பட்டிருந்தால், அவர்களுக்கு அனுப்பப்பட்டிருக்கும் தாக்கீட்டினை பணியாரங்களுக்கு வகபடியிலும், அன்னபிரஸாதங்களுக்கு இலவச அன்னபிரஸாத விநியோகக் கௌண்டரிலும் செலுத்திப் பெற்றுக்கொள்ளலாம்.

திருக்கச்சி நம்பிகள் அருளிய

# தேவராஜாஷ்டகம்

திரு. தி.அ. க்ருஷ்ணமாசார்யர், திருப்பதி.
(வித்வான், ஸிரோமணி)

(7)

புருஷாய புராணய
புண்யகோடி நிவாஸிநே
புஷ்பிதோதாரகல்பத்ரு
கமநீயாய மங்களம.

| | | |
|---|---|---|
| புண்யகோடி நிவாஸிநே | : | புண்யகோடி விமானத்தில் வாஸம் செய்யுமவனும் |
| புஷ்பித | : | மலர்கள் மலரப்பெற்று |
| உதார | : | உயர்ந்ததான |
| கல்பத்ரு | : | கற்பகமரம் போல் |
| கமநீயாய புராணய | : | விரும்பத்தக்க அழகுடையவனும் என்றுமுள்ள |
| புருஷாய | : | புருஷனுமான |
| தேவராஜாய | : | தேவப்பெருமானுக்கு |
| மங்களம் | : | மங்களம் உண்டாகுக. |

கற்பகமரம் போன்று விரும்பத்தக்க அழகுபடைத்தவன் தேவராஜன். அம்மரம் பலகிளைகளும் புஷ்பங்களும் கொண்டது. பேரருளாளன் - கிளைகள் போன்ற நான்கு திருக்கைகளும் அவற்றில் திருவாபரணங்களும் சங்கு சக்ரம் முதலிய ஆயுதங்களும் புஷ்பங்கள் போல் ஸேவை ஸாதிப்பதனாலே - புஷ்பிதோதார கல்ப த்ருகமநீயன் எனப்பட்டான்.

தேவப்பெருமாள் எழுந்தருளியுள்ள விமானத்திற்குப் புண்யகோடி விமானமென்று பெயர். அதன் சுற்றுப்புறத்தில் வசிப்பவர்கள் பண்ணும் புண்ணியம் ஒவ்வொன்றும் கோடிப் பங்கு புண்ணியமாகும்படி செய்யவல்ல ஆற்றல் படைத்துள்ளபடியால், புண்ய கோடி விமானமென்னப்படுகிறது.

(8)

காஞ்சநாசல ச்ருங்காக்ர.
காளமேகாநுஸாரிணே.
ஸுபர்ணம்ஸாவதம்ஸாய
ஸுரராஜாய மங்களம்.

| | | |
|---|---|---|
| காஞ்சநாசல | : | பொன்மலையினுடைய |
| ச்ருங்காக்ர | : | சிகரத்தின் நுனியில்படிந்த |
| காலமேக | : | நீர் கொண்டு கறுத்த |
| அநுஸாரிணே | : | மேகத்தையொத்தவனாய் |
| ஸுபர்ணம்ஸ | : | பொன்னிறமுள்ள கருடனுடைய |
| அவதம்ஸாய | : | தோளில் அலங்காரமாகப்படிந்த |
| ஸுரராஜாய | : | தேவப்பெருமாளுக்கு |
| மங்களம் | : | மங்களம் உண்டாகுக. |

பொன்னாலான மலை மேருமலை. அதன்மேல் கறுத்த மேகம் படிந்ததால் மஞ்சள் நிறமும் கறுப்பு நிறமும் ஒன்றற்கொன்று பரபாகமாய் பகைத்தொடையாய் இருந்து காண்பவர்கள் கண்களுக்கு எவ்வாறு இன்பம் பயக்குமோ, அங்ஙனம் பொன்னிறமுடைய கருடாழ்வார் திருத்தோள்களுக்கு அணிகலன் போல் நீலமேகம் போல் கறுத்த பேரருளாளன் எழுந்தருளியிருப்பதனால் ஒருவர்க்கொருவர் பரபாக சோபையையுடையவர்களாய் கஜேந்த்ராழ்வான் போன்ற பரமபக்தர்களின் கண்களுக்கு இன்பம் பயப்பர்கள் என்றபடி.

ஸுரராஜன் - நித்யஸூரிகளுக்குத் தலைவனான பரம்பொருள். பரம்பொருளுக்கு அடையாளமாகிய கருடவாஹனத்வம் இதனால் கூறப்பட்டதாயிற்று.

பேரருளாளனுக்கு கருடோத்ஸவம் மிகவும் விசேஷமென்பது லோகப்பிரசித்தம்.

(9)

போகாபவர்க்கயோரேகம்
வாஞ்சத்ப்யோ தததே த்வயம்
ஸ்ரீமத்வரதராஜாய
மஹோதாராய மங்களம்

| | | |
|---|---|---|
| போக அபவர்கயோ: | : | இவ்வுலகில் ஸுகத்தை அனுபவிப்பதென்ன, பரமபதத்தில் பகவானை அனுபவிப்பதென்ன இவ்விரண்டினுள்ளே |
| ஏகம் | : | ஏதாவதொன்றைமட்டும் |
| வாஞ்சத்ப்ய: | : | விரும்புமவர்கட்கு |
| த்வயம் | : | அவ்விரண்டையும் |
| தததே | : | அளிப்பவனாய் |
| மஹோதாராய | : | பெருங்கொடையாளனாகிய |
| ஸ்ரீமத்வரதராஜாய | : | ஸ்ரீமானான வரதராஜன் பொருட்டு |
| மங்களம் | : | மங்களம் உண்டாகுக. |

யாசிப்பவன் கேட்கும் பொருளைக் கொடுப்பவன் உதாரன். அவன் கேட்காத மற்றொரு நற்பொருளையும், கேட்டபொருளையும் சேரக்கொடுப்பவன் மஹோதாரன்.

போகம் - இவ்வுலகில் நிறைந்த செல்வம் பெற்று, மனைவி மக்கள் வீடு தோட்டம் இவற்றோடு கூடி அனுபவிக்கும் சுகமாகும்.

அபவர்க்கமாவது - இவ்வுலகவின்பத்தை விட்டுத்தொலைத்துப் பரமபதத்தில் ஸ்ரீமந்நாராயணனுக்குத் தொண்டு செய்து அனுபவிக்கும் ப்ரஹ்மானந்தமாகும்.

(10)

மதங்கஜாத்ரி துங்காக்ர
ச்ருங்க ச்ருங்காரவர்ஷ்மணே
மஹாக்ருபாய மத்ரக்ஷா,
தீக்ஷிதாயாஸ்து மங்களம்.

| | | |
|---|---|---|
| மதங்கஜாத்ரி | : | ஹஸ்திகிரியினுடைய |
| துங்க | : | உயர்ந்த |
| அக்ரச்ருங்க | : | கொடுமுடியினுச்சிக்கு |
| ச்ருங்கார | : | அலங்காரமான |
| வர்ஷ்மணே | : | திருமேனியை உடையவனும் |
| மத்ரக்ஷா | : | மிகத்தாழ்ந்த என்னைக் காப்பதில் |
| தீக்ஷிதாய | : | விரதம் பூண்டவனாகையாலே |
| மஹாக்ருபாய | : | பேரருள் படைத்தவனான தேவப்பெருமாளுக்கு |
| மங்களம் | : | மங்களம் உண்டாகுக. |

கருமயோகம், ஜ்ஞாநயோகம், பக்தியோகம், ப்ரபத்தியோகமென்னும் மோக்ஷோபாயங்களில் ஏதாவதொன்றை அனுஷ்டித்தவர்களைக் காக்கும் எம்பெருமான் க்ருபையை உடையவனாகக் கருதப்படுகிறான். முதல் மூன்றில் எதையும் செய்யாமல் நான்காவதான ப்ரபத்தியையும் முறையாக அனுஷ்டியாத தம்மையும் (திருக்கச்சிநம்பிகள் தம்மையும்) காப்பாற்றியே தீருவேனென்று விரதம் கொண்டிருப்பதை அறிந்த நம்பிகள் அவனை மஹா க்ருபையுடையவனாகக் கருதுகிறார்.

உபாயத்தை யனுஷ்டித்தவர்களுக்குப் பலனளிப்பது மீனுக்குத் தண்ணீர் வார்ப்பதையொக்குமென்றும், ஒன்றுமநுஷ்டியாதவர்களுக்கும் பலனளிப்பது பாலைவனத்தில் தண்ணீர்ப் பந்தல் வைப்பதையொக்குமென்றும் ஆசார்யர்கள் அருளிச் செய்வதை இங்கு நினைத்தல் தகும்.

(11)

ஸ்ரீகாஞ்சீபூர்ணமிச்ரேண
ப்ரீத்யா ஸர்வாபிபாஷிணே
அதீதார்ச்சாவ்யவஸ்தாய
ஹஸ்த்யத்ரீசாயமங்களம்.

| | | |
|---|---|---|
| ஸ்ரீகாஞ்சீபூர்ணமிச்ரேண | : | திருக்கச்சிநம்பியென்னும் பூஜ்யரோடு |
| ப்ரீத்யா | : | அன்புடன் |
| ஸர்வ அபிபாஷிணே | : | எல்லாவிதப்பேச்சுக்களையும் நன்றாகப் பேசுமவனாய் |
| அதீத அர்ச்சாவ்வஸ்தாய: | | கடந்த அர்ச்சாவதார வரம்பையுடையவனான |
| ஹஸ்த்யத்ரீசாய | : | ஹஸ்திகிரிநாதனுக்கு |
| மங்களம் | : | மங்களம் உண்டாகுக. |

ராமக்ருஷ்ணாதி விபவாவதாரங்களில் பேசுவது, அர்ச்சாவதாரத்தில் சிலை பொன் வெள்ளி முதலியவற்றாலாகிய ப்ரதிமை (பொம்மை)யென்னும் பூஜிக்கத்தக்க திருவுருவில் பேசுவதுஇல்லை என்று எம்பெருமான் ஏற்படுத்திக்கொண்ட வரம்பையும் கடந்து திருக்கச்சிநம்பி என்னும் பரமபக்தரோடு பரமப்ரீதியுடனே, இன்னதுதான் பேசுவதென்ற நிர்ப்பந்தமில்லாமல் அவசியமான பேச்சோடு அநாவசியமான பேச்சோடு

வாசியற எல்லாவற்றையும் பேசினான் பேரருளாளன். இத னால் நம்பிகளுக்குப் பெருமான் பக்கலில் உள்ள பக்திப் பெருக்கமும், அவனுக்கு நம்பிகள் திறத்திலுள்ள அன்புப் பெருக்கமும் எல்லைகடந்ததென்பது போதரும். இந்நம்பிகள் பேரருளாளனுக்கு இடைவிடாமல் திருவாலவட்டம் வீசிக் கொண்டும் அவனோடு பேசிக்கொண்டுமிருக்கும் பெரும்பேறு பெற்றவர். இவருக்கு நிகர் இவரே.

(12)

அஸ்து ஸ்ரீஸ்தனகஸ்தூரீ
வாஸநாவாஸிதோரஸே
ச்ரீஹஸ்திகிரி நாதாய
தேவராஜாய மங்களம்

| | | |
|---|---|---|
| ச்ரீஸ்தந கஸ்தூரீ | : | ஸ்ரீமஹாலக்ஷ்மியின் கொங்கைகளில் சாத்-தின கஸ்தூரியின் |
| வாஸநா | : | பரிமளத்தினால் |
| வாஸித | : | நறுமணம் கமழ்விக்கப்பட்ட |
| உரஸே | : | திருமார்வையுடையவனும் |
| ஸ்ரீஹஸ்திகிரி நாதாய | : | ஹஸ்திகிரி நாதனுமான |
| தேவராஜாய | : | தேவப்பெருமானுக்கு |
| மங்களம் | : | மங்களம் உண்டாகுக. |

தேவப்பெருமாளுடைய திருமார்பு - பெருந்தேவித் தாயா ரின் திருமார்பில் பூசப்பட்ட கஸ்தூரிக்காப்பு தன்னிடம் ஸம்பந்தித்ததனால் நறுமணம் கமழ்கின்றதாம். இதனால் பெருமாளை விட்டுப் பிரியாதவள் பிராட்டி, அவளை விட் டுப் பிரியாதவர் பெருமாள் என்பது அறிவிக்கப்பட்டு, அவ்விரண்டும் பேராய்ச் சேர்ந்திருக்கும் சேர்த்தியில் ஆச் ரயிக்க வேணுமென்னும் அச்சேர்த்தியிலேயே தொண்டும் செய்யவேண்டுமென்றும் பூர்வர்கள் அருளிச்செய்த சாஸ்த் ரார்த்தம் ஸூசனையாகக் காட்டப்பட்டது இதனால்.

(13)

மங்களாசாஸநபரை:
மதாசார்ய புரோகமை:
ஸர்வைச்ச பூர்வைராசார்யை:
ஸத்க்ருதாயாஸ்து மங்களம்.

| | | |
|---|---|---|
| மங்கள | : | பெருமாளுக்கு மங்களங்களை |
| ஆசாஸந | : | வேண்டிக்கொள்வதில் |
| பரை: | : | ஊற்றமுடையவராய் |
| மத் ஆசார்ய | : | எமது ஆசார்யரை |
| புரோகமை: | : | முதலாகக்கொண்ட |
| பூர்வாசார்யை: | : | முன்பு ஆசார்யர்கள் |
| ஸர்வைச்ச | : | எல்லோராலும் |
| ஸத்க்ருதாய | : | மங்களாசாஸனம் செய்து கௌரவிக்கப்-பெற்ற தேவராஜப்பெருமாளுக்கு |
| மங்களம் | : | மங்களம் |
| அஸ்து | : | உண்டாகுக. |

பகவானிடத்தில் தங்களுக்கு மங்களங்களை வேண்டிப் பெறுமவர்கள் ஸம்ஸாரிகள். பூர்வாசார்யர்களோவென்னில், தங்களுக்கொரு நன்மையையும் வேண்டாமல், தாங்கள் ஜீவித் திருப்பதே பகவானுக்கு மங்களாசாஸனம் செய்வதற்காகவே யென்னும் உண்மையை அறிந்து அதுக்குச் சேர - உனக்குப் பல்லாண்டு என்றும், உனக்கு மங்களமென்றும் அவனை வாழ்த்திக்கொண்டேயிருப்பார்கள். அங்ஙனம் பூர்வாசார்யர் கள் பல்லாண்டு பாடி ஸத்காரம் செய்யப்பெற்ற தேவப் பெருமாளுக்கு, அவர்களையடியொற்றி மாமுனிகள், தாமும் மங்களாசாஸனம் செய்து தலைக்கட்டினாராயிற்று.

மணவாளமாமுனிகள் திருவடிகளே சரணம்.

## வாழித்திருநாமம்

மருவாரும் திருமல்லி வாழவந்தோன் வாழியே
மாசிம்ருகசீரிடத்தில் வந்துதித்தோன் வாழியே
அருளாளருடன் மொழி சொல்லதிசயத்தோன் வாழியே
ஆறுமொழி பூதூரர்க்களித்த பிரான் வாழியே
திருவாலவட்டம் செய்து சேவிப்போன் வாழியே
தேவராசாட்டகத்தைச் செப்புமவன் வாழியே
தெருளாருமாளவந்தார் திருவடியோன் வாழியே
திருக்கச்சி நம்பியிருதிருவடிகள் வாழியே.

பதவுரை

| | | |
|---|---|---|
| மரு | : | நறுமணம் |
| வாரும் | : | வீசப்பெற்ற |
| திருமல்லி | : | பூந்தண்மல்லி என்னும் ஊரில் உள்ள அனைவரும் |

வாழ : சுகமாக வாழும்படி
வந்தோன் : அவதரித்தவர்
வாழியே : வாழ்க

மாசி : மாசி மாதத்தில்
மிருகசீரிடத்தில் : மிருகசீர்ஷநக்ஷத்திரத்தில்
வந்து : (சேனைமுதலியாராகப் பரமபதத்திலி-ருந்து) வந்து

உதித்தான் : பூமியில் அவதரித்தவர்
வாழியே : வாழ்க

அருளாளர் : பேரருளாளப்பெருமாள்
உடன் : தம்முடனே
மொழிசொல் : வார்த்தை சொல்லுவதற்கு ஈடான
அதிசயித்தோன் : பெருமையுடையவர்
வாழியே : வாழ்க

ஆறுமொழி : பேரருளாளர் அருளிய ஆறுவார்த்தைகளே
பூதூரார்க்கு : பெரும்பூதூர் மாமுனியான இராமாநுச முனிவர்க்கு
அளித்த : உபதேசித்த
பிரான் : உபகாரகர்
வாழியே : வாழ்க

திருவாலவட்டம் : பேரருளாளனுக்கு
செய்து : விசிறிவீசி
சேவிப்போன் : தொண்டுசெய்யுமவர்
வாழியே : வாழ்க

தேவராச அட்டகத்தை : பேரருளாளரைப் பற்றிய எட்டுச்லோகங்க-ளடங்கிய துதிநூலொன்றை
செப்புமவன் : அருளிச்செய்யுமவர்
வாழியே : வாழ்க

தெருள்ஆரும் : தெளிந்த அறிவு நிறைந்த
ஆளவந்தார் திருவடி-யோன் வாழியே : ஆளவந்தாருடைய திருவடிகளையடைந்-தவர் வாழ்க

திருக்கச்சிநம்பி : திருக்கச்சிநம்பிகளின்
இருதிருவடிகள் : இரண்டாய்ச் சேர்ந்து அழகிய திருவடிகள்
வாழியே : வாழ்க.

(முற்றும்)



திருக்குளம் ஸ்ரீமகாநந்தீஸ்வரர் திருக்கோயில் ஆ.பி.



ஸ்ரீபத்ரகாளி ஆலய ராஜகோபுரம் - அம்பகரத்தூர்.



பதீஸ்வரர், தவிர, இக்கோயில "வஞ்சி" மரத்தை ஸ்தல விருட்சமாகக் கொண்டதால் இவ்வாலயத்திற்கு "வஞ்சுலாரணயம்" என்றும், எல்லாப்பதிகளும் தோன்றுவதற்குமுன் தோன்றியதாகக் கருதப்படுவதால் ஆதிபுரி, ஆதியாபுரம், வஞ்சி என்ற பெயர்களு வழங்குகின்றன.

"ஆனடுத்துயர் பூசனையாற்றிய
அகிலமும்
தானளித்தலினாற் கரூரெனத்
தக்கது
வானடுத்தெழும் வஞ்சி
பசுபதியாயினார்
பான நஞ்சினர் பாழியும்
ஆனிலை வாயிற்றன்றே"

துள்ளன. இது போன்று பிற க்ஷேத்திரங்களில இல்லை!

முதல் பிராகாரத்துக்குச் சுற்று மணடபங்களில்விநாயகர், சுப்பிரமணியர் முதலிய மூர்த்திகள உள்ளனர. வட பக்கத்தில் அம்மன் கோயிலுக்குச செல்லும் வாயில் உள்ளது. இரண்டாம் பிராகாரததில், முன்னே ஒரு மண்டபமும் தென்பாகத்தில் கருவூரத் தேவர் கோயிலும், வட பாகத்தில் நூற்றுக்கால் மண்டபமும் உள்ளன. நூற்றுக்கால் மண்டபம் அழகிய வேலைப்பாடுகள் கொண்டது.



# பசுபதீச்சரம்

திரு. வி.எஸ். சீனிவாசன் - தஞ்சாவூர்.



தென்னாட்டில் சைவ சமயத்தலைவர்களால், தேவாரப்பாடல்கள் பாடப்பட்டுள்ள திருக்கோயில்கள் பல உள்ளன. இக்கோயில்களைப் பற்றி பல ஐதீகங்கள் உள்ளன. இவ்வகை ஆலயங்களில் ஒன்று கரூர் பசுபதீஸ்வரர் ஆலயமாகும்.

திருச்சி மாவட்டத்தில் கரூர் ஓர் முக்கிய நகரம். அமராவதி என்ற காவிரியின் உப நதிக்கரையிலே அமைந்த ஊர் இது. திருச்சி - ஈரோடு இருப்புப்பாதையில், ரயில் நிலையத்திலிருந்து நேர்மேற்கே ஒரு மைல் தூரத்தில் இவ்வாலயம் அமைந்துள்ளது. இக்கோயிலுக்கு "ஆனிலைக்கோயில்' என்ற பெயருண்டு. கோயில் கொண்ட இறைவனுக்கு ஆனிலைப்பெருமான், கல்யாண பசு என்று பேரூர்ப்புராணத்தில் குறிப்பிடப்பட்டது போன்று காமதேனு இறைவனைப் பூஜித்து சிருஷ்டித்தொழில் செய்ய, வரம் பெற்றுஅகிலமும் அளித்த காரணத்தால் இந்த ஊருக்குக் "கரூவூர்' என்று பெயர். கோயிலுக்கு "ஆனிலை" என்று பெயர்.

## திருக்கோயில்

ஆலயம் ஊருக்கு மேற்கில் அமைந்துள்ளது. சுவாமி சந்நிதி கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. இவ்வாலயத்தின் முக்கியச் சிறப்பு என்னவென்றால் இரண்டு அம்மன் சந்நிதிகள் இருப்பதுதான்! ஒரு சந்நிதி கிழக்கு நோக்கியும், மற்றொன்று தெற்கு நோக்கியும் அமைந்

காமதேனுவாகிய பசுவால் பூஜிக்கப்பெற்றதாலும், உயிர்களாகிய பசுக்களுக்கெல்லாம் பதியாய் இருப்பதாலும், பெருமானுக்குப் "பசுபதீச்சரர்" என்று பெயர். அம்மனுக்கு அலங்காரவல்லி, சௌந்தரவல்லி என்ற பெயர்கள்.

இவ்வாலயத்தில் (1) ஆதிநாயகராகிய பசுபதி லிங்கம். (2) கோடீச்சுரலிங்கம் (3) கயிலாய நாதலிங்கம் (4) கரியமாலீசர் லிங்கம் (5) வஞ்சுளேச்சுர லிங்கம் ஆகிய பஞ்சலிங்கங்கள் சிறப்புடையன.

தீர்த்தங்களில் முக்கியமானது - ஆம்பிராவதி நதி. வராக கிரியினின்றுஅம்பிகையின் திருவருளே நதியாய் வருவதால் "அம்பா நதி" என்னும், "ஆம்பிரம்" என்னும் பெயரு

டைய மாமரங்களின் நிழலில் வருவதால் "ஆம்பிராவதி"யென் றும், காமதேனு இந்நதியிற் படிந்து, பலதலங்களைப் பூஜித் ததால் "பொருனை" என்றும் வழங்கப்படுகிறது.

இறைவனை வழிபட்டவர்கள் காமதேனு, பிரமன், இந்திரன் முதலிய எட்டுத் திக்பாலர் கள், சூரிய - சந்திரர்கள் ஆவர். இத்தலத்தில்தான் விபண்டகன் என்னும் வேடன் முக்தி பெற் றான்.

## கருவூர்த்தேவர்

இக்கோயிலில் கருவூர்த்தேவர் இறைவன் அருள்பெற்று இறை வன் அருகிலேயே முக்தியும் பெற்று சமாதியில் அமர்ந்த தாகக் கூறப்படுகிறது. இக் கருவூர்த்தேவர்தான், தஞ்சை யில் ராஜராஜசோழன் கட்டு வித்த பிரகதீஸ்வரர் பெரிய கோயிலில் சிவலிங்க பிரதிஷ் டையின் போது உதவி புரிந் தவராவார். தஞ்சைக் கோயி லில் மேற்குப் பிராகாரத்தில் இவர் சந்நிதி உண்டு. நாள்தோ றும் வழிபாடுகள் நடைபெறு கின்றன. இப்பெரியார் கருவூர் ஆனிலைப் பெருமானை வழி பட்டுக் கரூரில் முக்தியடைந் தார்.

"வாரமார் கருவூர்த் தேவரெனு
மௌன சிவயோகியர் வேதச்
சிரமாரிசைப் பல மொழிந்து
சிவத்தானங்கள் பலவணங்கிக்
கரமார் நெல்லியெனச் சித்தி
காட்டி வதிய அவர்க்கு முத்திப்
பரமானந்தந்த கருவூர்ப்
பசுபதீசப் பெருமானே!"

என்ற பாடல் இதை நன்கு விளக்குகிறது.

இத்தலத்தில்தான் எறிபத்தர் என்ற அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவரான சிவபக்தர் வாழ்ந்து முக்திபெற் றது. இவர் பசுபதீச்சரரை வழி பட்டும், அவரது தொண்டர் களுக்குத் துன்பம் செய்தவர் களைத் தண்டித்தும் வந்தார். ஒருநாள் சிவகாமியாண்டார் என்ற அடியார் வழக்கம்போல், இறைவனுக்காக மலர் பறித் துக் கூடையிலிட்டு ஓரிடத் தில் தொங்கவிட, அவ்வழியே வந்த புகழ்ச்சோழனது யானை பூக்கூடையைப் பறித்துக் கீழே சிதறிவிட்டுச் சென்றது.

இது அறிந்த எறிபத்தர் அரசனது யானை என்றும் பாராது அதன் துதிக்கையை தன் கைமழுவால் தாக்கி வெட்டினார். யானை கீழே விழுந்து மாய்ந்தது. யானைப் பாகனையும் கொன்றார் எறி பத்தர். பிறகு புகழ்ச்சோழன் எறிபத்தரிடம் யானை செய்த அபசாரத்திற்கு மன்னிப்புக் கேட்டு, தன்னை மாய்க்கும்ப டியும், மாய்க்காவிடின் தானே தன் உயிரை வாங்கிக் கொள் வதாகவும் கூறி உடைவாளை எறிபத்தரிடம் கொடுத்தான்.

எறிபத்தர் வாளை வாங்கி தானே தன்னை மாய்த்துக் கொள்ள விரும்ப, புகழ்ச்சோ ழர் அவரைத் தடுக்க, இருவரை யும் ஆசீர்வதித்து அசரீரி வாக் கொன்று பிறந்தது. யானையும் உயிர் பெற்றெழுந்தது, பாகனும் எழுந்தான்.

இக்கோயில் இறைவனை ஞானசம்பந்தப்பெருமான் பாடி யுள்ளார். கருவூர்த்தே வர் திருவிசைப்பா இயற்றியுள் ளார். அருணகிரிநாதர் திருப்பு கழ் பாடியுள்ளார்.

## கல்வெட்டுக்கள்

இக்கோயில் பற்றிக் கல் வெட்டுக்கள் பல உள்ளன. ராஜ ராஜதேவன், இராஜேந்திர சோழன், கோனேரி மேக்கொண் டான், குலோத்துங்கன், விக்கி ரம சோழத்தேவன் ஆகிய இச் சோழர்கள் காலத்தும் கோயி லுக்கு நிலங்களும், கிராமங்க ளும், பொருளும் அளிக்கப்பட் டதாகத் தெரிகிறது.

கோயிலின் இரண்டாம் பிரா காரத்தின் சுவரில் மூன் றும் குலோத்துங்க சோழன் தேவன்பள்ளி, கிராமத்திலி ருந்து மூன்று கழஞ்சுக் குச் சில நிலங்களை கோயி லுக்கு வாங்கியதும், அம்மன் கோயில் தென்பக்கச் சுவரில் ஸ்ரீராஜேந்திர சோழனின் ஒன் பதாம் ஆண்டில் நெல் "வேப் பள்ளி" கிராமம் கோயிலுக்குக் கொடுக்கப்பட்டதுமான தகவல் கள் காணப்படுகின்றன. இது போன்று பல கல்வெட்டுக்கள் உள்ளன. ஆகவே, ஆலயம் மிகத்தொன்மை வாய்ந்தது என் பது தெளிவு!

ஒவ்வொரு வருஷம் பங்குனி மாதத்தில் பிரம்மோற்சவம், தேரோட்டம் நடைபெறுகின் றன. இக்கோயில் சென்னை அறநிலையப் பாதுகாப்பு போர் டார் நிர்வாகத்தின் கீழ் உள் ளது என்பது முக்கியக் குறிப் பாகும்.



## குமரி மாவட்டத்தில்
# மகா சிவராத்திரி விழா

திரு. எம். இராஜகோபாலன் - சென்னை.

சில குறிப்பிட்ட மாதங்களில் முறைப்படி விரதமிருந்து சில தலங்களுக்கு யாத்திரையாகச் செல்லும் பக்தர்களை ஏராளமாகக் காணலாம். கார்த்திகை, மார்கழி, தை ஆகிய மாதங்களில் முறையாக விரதமிருந்து இருமுடி தாங்கியவாறு சபரிமலை நோக்கிச் செல்லும் யாத்திரிகர்கள் ஆண்டுக்கு ஆண்டு பெருகி வருகிருர்கள். இது போலவே தை மாதத்தில் பழனி மலைக்கும் , புரட்டாசி மாதத்தில் திருப்பதிக்கும் பக்தர்கள் பயணமாகின்றனர். வைகுண்ட ஏகாதசியன்று நெல்லை மாவட்டத்திலுள்ள நவதிருப்பதிகளைத் தரிசிப்பதும் பழக்கத்திலுள்ளது. இது போலவே மகா சிவராத்திரியன்று குமரி மாவட்டத்திலுள்ள பன்னிரண்டு சிவாலயங்களுக்கும் சென்று வழிபடும் பக்தர்கள் ஏராளம். இவர்களும் சில விதிகளுக்கு உட்பட்டு இவ்வழிபாட்டை மேற்கொள்கிருர்கள்.

பண்டைய காலத்தில் வேணுட்டின் தலைநகராக விளங்கிய கல்குளம் (இன்றைய பத்மநாபபுரம்) என்ற தலத்தைச் சுற்றியே இப்பன்னிரண்டு சிவாலயங்களும் அமைந்துள்ளன. விரதமிருந்த பக்தர்கள் பன்னிரண்டு ஆலயங்களையும் சுற்றி ஓடியவாறு சுமார் 70 கி.மீ. தூரத்தை ஓர் இரவில் கடக்கின்றனர். இதனைச் சிவாலய ஓட்டம் என்றும் சாலிய ஓட்டம் என்றும் குறிப்பிடுகின்றனர். இதில் பங்கேற்பவர்கள் பொதுவாக மஞ்சள் அல்லது குங்குமம் நிறத்திலான ஆடைகளை விரத காலத்தில் உடுத்துகின்றனர். மாசி ஏகாதசிக்கு ஒருவார காலத்திற்கு முன்னரே மாலை அணிந்து விரதத்தைத் துவக்குகின்றனர். இப்பக்தர்கள் கையில் விசிறி, மின்விளக்கு, பணமுடிச்சு ஆகிய பொருட்களை ஏந்துவர். முற்காலத்தில் மின் விளக்கிற்குப் பதிலாகத் தென்னங்கீற்றுகளாலான பந்தத்தை (சூட்டு) எடுத்துச் சென்றிருந்தனர். விரத காலத்தில் வேகவைத்த உணவு வகைகளை உட்கொள்ளாமல், பகலில் நுங்கு, இளநீர், அதன்உட்பகுதி (கருக்கு) ஆகியவற்றையும் இரவில் துளசி இலை, நீர் போன்றவற்றையும் உணவாக ஏற்



ஸ்ரீநீலகண்ட சுவாமி கோயில் - பத்மநாபபுரம்.

றுக்கொள்ளுவர். பயணத்தின் போது ஒரு குருசாமி தலைமை தாங்குவதுண்டு. ஓடும் போது 'கோவிந்தா', 'கோபாலா' என்று திருமாலின் திருநாமத்தை உச்சரிப்பது வழக்கம். இது ஒரு விநோதமான பழக்கமாகும். இவ்வாறு சிவாலயத்தை வலம் வரும் போது திருமாலின் திருநாமத்தைமுழங்கும் பழக்கம் சைவ-வைணவ ஒற்றுமையை வளர்க்கும் நோக்கத்துடன் துவங்கி இருக்கலாம். ஐயப்ப பக்தர்கள் ஒருவரை ஒருவர் 'ஐயப்பா' என விளிப்பது போலவே சிவாலய ஓட்டத்தில் பங்கேற்போர் ஒருவரையொருவர் 'கோவிந்தா!' என்றே விளிப்பது உண்டு. இப்பக்தர்களைக் கூட்டாகக் 'கோவிந்தர்கள்' என்றே குறிப்பிடுவர்.

பன்னிரு சிவாலயங்களுள் முதலாவதான (முஞ்சிறை) திருமலையில் வழிபாடு முதலில் துவங்கும். கோயிலுக்கருகேயுள்ள திருக்குளத்தில் நீராடிப் பூசையை முடித்தபின் திக்குறிச்சி, திற்பரப்பு, திருநஞ்சிக்கரை ஆகிய தலங்களை வரிசையாகத் தரிசித்தவாறு பொன்மனை என்ற ஆலயத்தை அடைவார்கள். அங்கு வாழைப்பழம், இளநீர் ஆகியவற்றை அவர்கள் புசிப்பர். பொன்மனையிலுள்ள 'தேரியம் வீடு' என்ற குடும்பத்தினர் கோவிந்தர்களுக்குத் தினமும் கஞ்சி, பலாக்காய், எரிச்சகறி ஆகியவற்றை அளிப்பர். இப்பழக்கம் பரம்பரை பரம்பரையாக ஆதிமுதல் நடைபெற்று வருகிறது. பொன்மனையிலிருந்து பன்னிப்பாகம், கல்குளம், மேலாங்கோடு, திருவிதாங்கோடு, திருப்பன்றிக்கோடு ஆகிய தலங்களை வழிபட்டவாறு இறுதியாக நட்டாலம் என்ற தலத்தை அடைவர். அங்கு உள்ள இருகோயில்களில் எழுந்தருளியுள்ள அர்த்தநாரீஸ்வரர், சங்கரநாராயணர் ஆகியோரை வழிபடுவர். பன்னிரண்டு ஆலயங்களையும் தரிசித்த பின்னர், மும்மூர்த்திகள் இணைந்து தாணுமாலயனாகக் காட்சியளிக்கும் சுசீந்திரம் சென்று விரதத்தை முடித்துக் கொள்ளுவர். ஒருசாரார் மட்டும் சுசீந்திரத்திற்குப் பதிலாகத் திருவட்டாற்றில் பள்ளி கொண்டுள்ள ஆதிகேசவப் பெருமாளைப் பூசித்து விரதத்தை முடிப்பதுண்டு.

குமரி மாவட்டத்தில் ஒரு காலத்தில் சமணம் பெரும் செல்வாக்கு பெற்றிருந்தது. நாகர் கோயில் (நாகராஜர் ஆலயம்) குறண்டை, திருநந்திக்கரை, திருச்சாரணத்துமலை ஆகிய இடங்களிலுள்ள ஆலயங்கள் சமணர்கள் முற்காலத்தில் தழைத்து ஓங்கிய வரலாற்றுக்குச் சான்றாகத் திகழ்கின்றன. சமணர்களின் ஆதிக்கத்தை ஒடுக்குவதற்குச் சைவர்கள் வைணவர்கள் ஆகியோர், இணைந்து முயற்சிகள் மேற்கொண்டதன் விளைவாகவே இச்சிவாலய ஓட்டம் தோன்றியிருக்கவேண்டும். இதே நோக்கத்துடன் சைவ ஆலயங்களில் வைணவச் சிற்பங்களையும், வைணவ ஆலயங்களில் சைவச் சிற்பங்களையும் இடம் பெறச் செய்தனர். இன்றும் சாலிய ஓட்டத்தில் சாதி, வேறுபாடின்றி, பலதரப்பட்ட மக்கள் கலந்து கொள்கின்றார்கள். ஆயினும் இதில் கிருஷ்ண வகை என்ற இனத்தைச் சேர்ந்தவர்களே அதிகம் பங்கேற்கின்றனர்.

சிவாலய ஓட்டம் ஆதியில் துவங்கிய காலத்தை அறுதியிட்டுக் கூற இயலாதபோதிலும் கி.பி. எட்டாம் நூற்றாண்டின் பின்னரே இப்பழக்கம் மக்களிடையே ப்ரபல்யம் அடைந்திருக்க வேண்டும். சிவாலய ஓட்டம் பற்றிக் கல்வெட்டுக்கள், செப்பேடுகள், பட்டயங்கள் போன்றவற்றில் எந்தத் தகவலும் இல்லை. ஒரு



ஸ்ரீமகாதேவர் கோயில் - திற்பரப்பு.

சில நாடோடிப் பாடல்களில் மட்டுமே இதில் பங்கேற்போர் கடைப்பிடிக்கவேண்டிய விதிமுறைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. அப்பழக்கத்தின் தோற்றம் பற்றிய கர்ணபரம்பரைக் கதை ஒன்று உள்ளது. பஞ்சபாண்டவர்கள் ஒரு மாபெரும் வேள்வியை நடத்த முடிவு செய்தனர். புலியின் முகமும், மனித உடலும் உடைய புருஷாமிருகம் என்ற விசித்திரமான உயிரினத்தின் பால் அவர்களுக்குத் தேவைப்பட்டது. தீவிர சைவ பக்தரான புருஷாமிருகம் வைணவர்களை வெறுத்தது. புருஷாமிருகம் தனது ஆட்சிக்கு உட்பட்ட பிரதேசத்தின் நுழையும் வைணவர்களைப் பிடித்துத் துன்புறுத்தும். தனது எல்லையைக் கடந்து விட்டால் அவர்களை அது விட்டுவிடும். புருஷாமிருகத்தின் பாலைப் பெற்று வருவதாக ஆணவத்துடன் பீமன் சவால் விடுத்தான். பீமனின் செருக்கை அடக்கவும், புருஷாமிருகத்தின் அறியாமையைப் போக்கவும் எண்ணி கிருஷ்ணபரமாத்மா பன்னிரண்டு லிங்கங்களை விருகோதரனிடம் கொடுத்து அனுப்பினார்.

சிவபூஜையில் ஆழ்ந்திருந்த புருஷா மிருகத்தின் பாலைக் கோவிந்தனின் திருநாமத்தை உச்சரித்தவாறு பெற பீமன் முயற்சித்தான். கோவிந்தனின் நாமத்தைக் கேட்டவுடன் விழித்த புருஷாமிருகம் பீமனைப் பிடித்துக் கொண்டது. பீமன் தன்னிடமிருந்த பன்னிரண்டு லிங்கங்களுள் ஒன்றை கீழே வைத்தான். உடனே புருஷாமிருகம் அதனை பூசிக்கத் துவங்கியது. இவ்வாறு பன்னிரண்டு



ஸ்ரீமகாதேவர் கோயில் - திருநந்திக்கரை.

முறை இதே சம்பவம் நடைபெற்றது. பன்னிரண்டாவது முறை இறைவன் சங்கரநாராயணராகக் காட்சியளித்து அருளினார். அரியும், அரனும் ஒரே சக்தியின் இருவேறு அம்சங்கள் என்ற உண்மையைப் புருஷாமிருகம் உணர்ந்து கொண்டது. பீமனிடம் இருந்த லிங்கங்கள் தீர்ந்து போனதால் அவன் எளிதில் புருஷா மிருகத்தால் பீடிக்கப்பட்டான். மிக்க பலசாலியான போதிலும் அவனால் புருஷாமிருகத்தின் எல்லையை விடுத்து முழுமையாக வெளியே வரமுடியவில்லை. தான் புருஷா மிருகத்தின் எல்லையைத் தாண்டி விட்டதால் தன்னை விட்டுவிடுமாறு பீமன் வாதாடினான். பீமனின் உடலின் ஒரு பகுதி தனது எல்லைக்குள் இருப்பதாகப் புருஷாமிருகம் கருதியது. இந்த வழக்கில் தீர்ப்பு வழங்குமாறு புருஷாமிருகம் தரும புத்திரனை அழைத்தது. தனது சகோதரன் என்ற பாச உணர்வை விடுத்து அவனது உடலின் ஒரு பகுதி புருஷாமிருகத்தின் எல்லைக்குள் அடங்கி இருப்பதாக யுதிஷ்டிரன் தீர்ப்பு வழங்கினார். தருமரின் பாரபட்சமற்ற தீர்ப்பைக் கேட்டு அகமகிழ்ந்த புருஷாமிருகம் பீமனை விடுவித்தது. விருகோதரனின் ஆணவம் அடங்கியது. பீமன் பன்னிரண்டு லிங்கங்களை விடுத்த இடங்களில் இப் பன்னிரண்டு சிவாலயங்கள் தோன்றின. இச்சம்பவத்தை விளக்கும் உயிரோட்டமான சிற்பங்களை நெல்லை மாவட்டத்திலுள்ள கிருஷ்ணபுரம் திருவேங்கடமுடையவன் திருக்கோயிலில் காணலாம்.

## பன்னிரண்டு சிவாலயங்கள்

### (1) திருமலை மகாதேவர் திருக்கோயில் :

குழித்துறையிலிருந்து தேங்காய் பட்டினம் செல்லும் சாலையிலுள்ள முஞ்சிறை என்ற ஊரில் ஒரு சிறு குன்று போல உயர்ந்த பகுதியில் கிழக்கு நோக்கிய



ஸ்ரீமகாதேவர் கோயில் - திருவிதாங்கோடு.

வாறு இத்திருக்கோயில் உள்ளது. இதிலுள்ள இரு சந்நிதிகளில் மகாதேவரும், திருமாலும் கோயில் கொண்டுள்ளனர். மூலவரான மகாதேவர் உருத்திராட்ச வடிவில், சுயம்புவாகக் காட்சியளிக்கிருர். திருமலைநாயக்கரின் தாயான உதச்சி என்பாள் பிள்ளைப்பேறு வேண்டி அருகேயுள்ள ஒரு கோட்டையில் தவமிருந்தாள். அவளது தவத்தின் விளைவாகப் பிறந்தவரே திருமலை நாயக்கர். அவரது தாயார் தங்கிய இடம் இன்றும் 'உதச்சி கோட்டை' என வழங்கப்படுகிறது. திருமலை நாயக்கர் இக்கோயிலுக்கு விலையுயர்ந்த கவசம், 182 தோலா எடையுள்ள தங்க அங்கி, பொற்கீரிடம் ஆகியவற்றை அளித்தார். மகாதேவர் அருளால் தீராப்பிணியிலிருந்து குணமடைந்த சுப்பிரமணிய செட்டியார் என்ற அன்பர் ஒரு மணியைக் காணிக்கையாகச் சமர்ப்பித்துள்ளார். மூலவரைச் சூலபாணி, முஞ்சிறைத் தேவர் என்று கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. இக்கோயிலில் மாசி கும்பாஷ்டமி, கார்த்திகை விருச்சிக அஷ்டமி, பங்குனி விழா ஆகிய விழாக்கள் கொண்டாடப்படுகின்றன.

(2) திக்குறிச்சி மகாதேவர் ஆலயம் :

தாமிரவருணிக்கரையில் நாற்சதுர மணி மண்டபத்தில் கிழக்கு நோக்கியவாறு இக்கோயிலின் கருவறை அமைந்துள்ளது. இவ்வாலயத்தில் நந்தி, கொடிமரம் ஆகியன இல்லை. இக்கோயிலில் ஆதியில் இடம்பெற்றிருந்த நந்தி சுற்றுப்புறத்திலுள்ள பகுதிகளுக்குப் பெருத்த சேதம் விளைவித்து வந்தது. நம்பூதிரிபாடு என்பவர் தனது மந்திரசக்தியால் அதனை ஆற்றில் மறையச் செய்தாராம். இங்கு மார்கழி மாதத்தில் திருவிழா நடைபெறுகிறது.

(3) திற்பரப்பு மகாதேவர் ஆலயம் :

தக்கலையிலிருந்து குலசேகரம் வழியாகக் கேரளம் செல்லும் பாதையில் திற்பரப்பு அருவியும், கோயிலும் அமைந்துள்ளன. வீரபத்திரர், ஜடாதரர், மகாதேவர் எனவெல்லாம் அழைக்கப்படும் மூலவர் உக்கிர மூர்த்தியாக லிங்க வடிவில் மேற்கு நோக்கியவாறு காட்சியளிக்கிருர். இவரது உக்கிர சொரூபத்தைக் காணமுடியாமல் நந்தி சற்றே வடக்கு நோக்கி விலகியிருப்பதாக நம்புகின்றனர். ஈசனின் ஆணையைச் சிரமேலேற்று, தட்சனை ஒறுத்தபின் வீரபத்திரரும், காளியம்மனும் இங்குக் கானகப் பகுதியில் தவமியற்றியதாகக் கூறுவர். இதற்கேற்ப இங்கு பத்திரகாளிக்கு ஒரு சிறு கோயில் உள்ளது. வெளிப்பிரகாரத்தில் கோலம் கொண்டுள்ள ஜுரதேவர் வழிபடுவோரின் பிணிகளை அகற்றி அருள்பாலிக்கிருர். அம்மன், சண்முகர், சாஸ்தா, கணபதி, திருவம்பாடி, கிருஷ்ணன் ஆகியோரையும் ஆலயத்தில் தரிசிக்கலாம். மார்கழி திருவாதிரையும், பங்குனிப் பெருவிழாவும் நடைபெறுகின்றன. பங்குனித் திருவிழாவின் முன்ரும் நாளன்று நிகழும் அங்குரார்ப்பணம் என்ற நிகழ்ச்சி சிறப்பு வாய்ந்தது. இந்நாளன்று நவதானியங்களை விதைப்பர். ஒன்பதாம் நாளன்று அவை முளை விட்டால் அது விசேடமாகக் கருதப்படும்.

(4) திருநந்திக்கரை மகாதேவர் ஆலயம் :

தக்கலையிலிருந்து பேச்சிப்பாறை செல்லும்பாதையில் இத்தலம் உள்ளது. சமணர் காலத்தில் தோன்றியதாகக் கருதப்படும் குடைவரைக் கோயில் இங்கு உள்ளது. பின்னர் இக்குடைவரையில் சிவலிங்கம் தாபிக்கப்பட்டு வழிபாடுகள் நடை

பெற்று வந்தன. ஒருமுறை குளத்தில் ஒரு சிவலிங்கமும், நந்தி போன்ற உருவமுடைய பாறையும் மிதந்து வருவதைச் சிலர் கண்டனர். சோதிடர்களுடன் கலந்து ஆலோசித்தப் பின்னர் புதைந்திருந்த ஒரு லிங்கத்தைக் கண்டுபிடித்து அங்கு ஒரு கோயில் எழுப்பினர். அதுவே இன்று மகாதேவர் கோயில் என வழங்கப்படுகிறது. மூலவர் நந்தீஸ்வரர் மட்டுமின்றி, இக்கோயிலில் விஷ்ணு, சாஸ்தா ஆகியோருக்கும் சந்நிதிகள் உள்ளன. கருவறையைச் சுற்றி மகாவிஷ்ணுவின் தசாவதாரங்கள் சிறு வடிவங்களாகக் காட்சியளிக்கின்றன. முற்காலத்தில் இப்பகுதியில் சமணர்கள் அதிக அளவில் வாழ்ந்து வந்தனர்.

**(5) பொன்மனை மகாதேவர் ஆலயம்**

தாமிரபரணியின் இடது கரையோரமாக அமைந்துள்ளது. தக்கலையிலிருந்து சுருளக்கோடு வழியாகக் குலசேகரம் செல்லும் பாதையில் இத்தலம் உள்ளது. கிழக்கு நோக்கிய இக்கோயிலில் மூலவர் தீம்பிலேஸ்வரர் லிங்க வடிவில் காட்சியளிக்கிறார். நந்தி மண்டபத்தின் மேல் நவக்கிரகங்களையும் சில புராணச் சிற்பங்களையும் காணலாம்.

கணிகர் வகுப்பைச் சேர்ந்த தீம்பிலாதிபன் என்ற வேடன் கானகத்தில் மரங்களை வெட்டிக்கொண்டிருந்த போது அவனது ஆயுதம் மறைந்திருந்த லிங்கத்தின் மீது பட்டு உதிரம் பெருகியது. அவ்விடத்தில் கோயில் கொண்டவரே தீம்பிலேஸ்வரர். இக்கோயிலில் கணபதி சாஸ்தா ஆகியோரையும் வழிபடலாம்.

**(6) பன்னிப்பாக்கம் மகாதேவர் ஆலயம் :**

தக்கலையிலிருந்து சுருளக்கோடு செல்லும் பாதையில் இக்கோயில் உள்ளது. அருச்சுனன் பாசுபதாஸ்திரம் பெரும் பொருட்டுத் தவம் புரிந்தது போது பன்றி வடிவிலுள்ள மூகாசுரன் அவனைத்தாக்க முற்பட்டான். அப்பன்றியை அர்ச்சுனன், வேட்டுவக்கோலத்தில் அங்கு தோன்றிய சிவபெருமானும் ஒரே நேரத்தில் வதைத்தனர். பின்னர் தனஞ்சயன் பாசுபதக் கணையைப் பெற்றான். இச்சம்பவத்திற்குச் சான்றாக புஷ்குன்னிமலை, கணை தொடுத்த அம்பலம், கட்டளை தபசல்மூடு, பன்றிக்குண்டு, கைலாயம் ஆகிய சிற்றூர்கள் இவ்வூரைச் சுற்றி அமைந்துள்ளன. இக்கோயிலிலுள்ள மூலவரான கிராத மூர்த்தி லிங்கவடிவில் காட்சியளிக்கிறார். நாய் வாகனத்துடன் தோன்றும் பைரவரையும் ஒரு சந்நிதியில் காணலாம்.

**(7) கல்குளம் நீலகண்டசுவாமி ஆலயம் :**

தக்கலையிலிருந்து ஒரு கல் தொலைவிலுள்ள கல்குளம் இன்று பத்மநாபபுரம் என வழங்கப்படுகிறது. நீலகண்டஸ்வாமி கோயிலில் திராவிடக் கட்டிடக் கலையும், கேரளக் கோயில் கலையும் இணைந்திருப்பதைக் காணலாம். முகப்பில் அழகிய ஐந்து நிலைக் கோபுரமும், திருக்குளமும் அணி செய்கின்றன. மண்டபங்களில் கர்ணன், அர்ச்சுனன், வேணுகோபாலன், கங்காளநாதர் ஆகியோரின் பிரம்மாண்டமான சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. சாஸ்தா, விநாயகர், நடராஜர், ஆதிமூலஸ்வாமி, இரட்டைப் பிள்ளையார், சண்டேஸ்வரர் ஆகிய உபதேவதைகளையும் தரிசிக்கலாம்.

மதுரை மீனாட்சியம்மன் தனது பக்தராக விளங்கிய மார்த்தாண்டவர்மர் என்ற திருவிதாங்கூர் மன்னரின் கனவில் தோன்றிக் கல்குளத்திற்கருகே புதைந்துகிடக்கும் தனது விக்கிரகத்தைக் கோயிலில் பிரதிஷ்டை செய்யுமாறு கட்டளையிட்டார். அம்மனின் அழகில் மயங்கிய மன்னர் அவருக்கு ஆனந்தவல்லி என்று திருநாமம் இட்டார். முற்காலத்தில் இங்கு



ஸ்ரீமகாதேவர் கோயில் - திருமலை (முஞ்சிறை)

வாழ்ந்து வந்த நீலகண்ட சுவாமிகள் என்ற முனிவரின் சமாதி மீது மக்கள் நிறுவிய லிங்கம் ஆதிமூலஸ்வாமி என்று வழங்கப்படுகிறது. கோயிலில் பணியாற்றி வந்த ஒரு பெண்மணி தனது கையில் ஏந்தி வந்த பானைக்கடியில் தோன்றிய லிங்கமே நீலகண்ட சுவாமியாகும். இக்கோயிலில் புரட்டாசி நவராத்திரியும், பங்குனித் திருவிழாவும் சிறப்பாக நடைபெறுகின்றன.

**(8) மேலாங்கோடு காலகாலர் ஆலயம்**

பத்மநாபபுரம், வேணிமலை ஆகிய தலங்களுக்கு இடையே வயல் வெளியில இக்கோயில் அமைந்துள்ளது. இங்குள்ள மூலமூர்த்தி காலகாலர் எனப் படுவார். இங்கு சிவராத்திரி மட்டுமே முக்கிய விழா வாகும். இக்கோயிலுக்கு அருகேயுள்ள இசக்கியம்மன் கோயிலுக்கு அதிக அளவில் பக்தர்கள் வருவதுண்டு.

**(9) திருவிடைக்கோடு சடையப்பர் ஆலயம்**

பத்மனாபபுரத்திற்கு 5 கி.மீ. தொலைவில் இக்கோயில் உள்ளது. பதினெண்சித்தர்களுள் ஒருவரான இடைக்காடருக்கும் இப்பகுதிக்கும் தொடர்பு உள்ள தாக ஒரு சாரார் கூறுவர். மாடு மேய்க்கும் ஒரு சிறுவனின் கால்கள் முட்புதரில் சிக்கியபோது அவனது நண்பனான முகமதிய சிறுவனால் அப்புதரில் கண்டு பிடிக்கப்பட்ட லிங்கமே இக்கோயிலில் உள்ளது. சித்திரை விழாவின் போது ஒரு முகமதியரும், தாழ்த்தப்பட்ட இனத்தவர் ஒருவரும் துண்டு ஒன்றை மேளதாளத்துடன் காணிக்கையாக இக்கோயிலுக்கு அளிப்பதை இன்றும் காணலாம். இங்கு மூலவருக்குச் சடையப்பர் என்ற திரு நாமம் உள்ளது.

**(10) திருவிதாங்கோடு மகாதேவர் திருக்கோயில்**

தக்கலைக்குத் தென்மேற்கில் 5 கி.மீ. தொலைவில் கிழக்கு நோக்கியவாறு இக்கோயில் தோற்றமளிக்கிறது. மூலவருக்குப் பரிதிபாணி என்ற பெயர் உளளது. தென்புறத்தில் உள்ள தனிக்கோயிலில் சங்கு, சக்கரம், பத்மம், கதை ஆகியவற்றுடன் மகாவிஷ்ணு அருள்பாலிக்கிறர். மூலவர் பரிதிபாணி இயற்கையாக அமைந்துள்ள பாறை மீது செதுக்கப்பட்டதாகத் தெரிகிறது. ஸ்ரீவலிப்பிரகாரம் தூண்களில் தீப லக்ஷ்மிகள் பலரைக் காணலாம். மூலவரைக் கல்வெட்டுக்கள் "ஆலமரத்தில் பொதிந்துள்ள இறைவன்" என்று குறிப்பிடுகின்றன. இங்கு சித்திரையில் திருவிழா நடைபெறுகிறது.

**(11) திருப்பன்றிக்கோடு மகாதேவர் திருக்கோயில்**

தக்கலை - கருங்கல் நெடுஞ்சாலையிலுள்ள பள்ளியாடி என்ற ஊருக்கு அருகே இக்கோயில் உள்ளது. இரண்யாட்சன் பூமியைப் பாயாகச் சுருட்டியவாறு பாதாளலோகம் சென்றான். மகாவிஷ்ணு வராக உரு வெடுத்துப் பூமியைப் பிளந்து சென்று அவனை அழித்தார். வெற்றி மமதையில் வெறியாட்டம் புரிந்து அப்பன்றியின் கொம்பை முறித்து அதனைச் சுயநிலைக்குச் சிவபெருமான் திருப்பிய இடமே திருப்பன்றிக்கோடு. (கோடு-கொம்பு)

இக்கோயில் முகிலன் என்ற முகம்மதியப் படைத்தளபதியால் தாக்கப்பட்டது. மூலவரையும் வாளால் காயப்படுத்தினர். பின்னர் சிலகாலம் கோயில் பாழடைந்த நிலையிலிருந்தது. திருவிதாங்கூர் மன்னர் மூலம் திருநாள் மகாராஜாவின் கனவில் இறைவன் தோன்றி "நான் நனைகிறேன், நீ உறங்குகிறாயா" என வினவினாராம். மூலம் திருநாள் மகாராஜாவே கோயிலைப் புதுப்பித்துப் பல திருப்பணிகள் புரிந்தார்.

இங்குள்ள இறைவன் சிறந்த வரப்பிரசாதி. ஒரு கிறித்துவர். தனது பசு கன்றை ஈன்றால் அதைக் கோயிலுக்குக் காணிக்கையாக அளிப்பதாக உறுதி அளித்தாராம். பின்னர் அவர் வாக்கை நிறைவேற்றவில்லை. அவருக்குச் சொந்தமான மாடு ஒன்று கோயிலை விட்டு வெளியே நகர மறுத்ததாம். அதன் பின்னரே தனது தவறையுணர்ந்த அக்கிறித்துவர் அதனையே காணிக்கையாக அளித்தார். மற்றொரு முறை கோயிலிலுள்ள தேன் கூட்டிலிருந்த தேனை அபகரித்த ஒரு சிலரை ஒரு மாடு வெகு தூரம் விரட்டியது.

இக்கோயிலில் சில அறபுத மான சிற்பங்கள் உள்ளன. கூம்பிய இரண்டு தட்டு விமானம் கருவறையை அலங்கரிக்கிறது. இங்குக் கார்த்திகை மாதம் விழா நிகழும். விழாக்களில் கிறித்துவர்களும் பங்கேற்பது உண்டு.

**(12) திருநட்டாலம்**

நாகர்கோயிலிலிருந்து 22 கி.மீ. தொலைவிலுள்ள இத்தலத்தில் இருகோயில்கள் குளத்தின் இருபுறங்களிலும் அமைந்துள்ளன. முதலாவதாக உள்ள சிவாலயத்தில் அருளும் இறைவர் அர்த்தநாரீஸ்வரர் என்றும் திருக்கண்ணப்பர் என்றும்

பெயர் பெற்றுள்ளார். விஷ்ணு கோயிலில் மூலவர் சங்கரநாராயணராகக் காட்சி தருகிறார். இக்கோயிலில் பங்குனி மாதத்தில் திருவிழா நடைபெறும். சிவாலய ஓட்டம் இத்தலத்தில் நிறைவடையும். பன்னிரு ஆலயங்களையும் தரிசித்த பின்னர் பக்தர்கள் சுசீந்திரத்திற்குச் சென்று மும்மூர்த்திகளின் அருளையும் பெறுகின்றனர்.

இப்பன்னிரண்டு கோயில்களிலும் கேரள ஆலயங்களிலுள்ளது போலவே வழிபாடுகளும், சடங்குகளும் நடைபெறுகின்றன. மலையாள நாட்டைச் சார்ந்த போற்றி மரபினரே வழிபாடுகளை நடத்துகின்றனர். கோயில்களும் கேரள கட்டிடக் கலையை ஒட்டியே அமைந்துள்ளன. வட்ட வடிவமான கருவறை மீது கூம்பிய வடிவிலுள்ள விமானமும் அதன் மீது கலசமும் உள்ளன. விமானம் ஓடுகளால் வேயப்பட்டுச் செப்புத் தகடுகளால் அலங்கரிக்கப்பட்டிருக்கும். சிவராத்திரி விழா மாசி மாதத்தில் கொண்டாடப்படுகின்றது. பாற்கடலைத் தேவர்களும் அசுரர்களும் கடைந்த போது உண்டான நஞ்சை உட்கொண்ட ஈசனுக்கு எவ்வித ஊறும் நேரக் கூடாது என்று மக்கள் இரவு முழுவதும் கண் துஞ்சாது வழிபடும் நாளே மகா சிவராத்திரி என்று ஒரு கருத்து உள்ளது. சிவராத்திரியுடன் தொடர்புடைய ஏராளமாக கிளைக்கதைகளைப் புராணங்களில் காணலாம்.

மேற்குக் கரையோரத்தில் உள்ள சிவாலயங்களில் தாரா பூஜை என்ற சடங்கு சிறப்பு வாய்ந்தது. வட்டவடிவமுடைய செப்புக் கலயத்தின் நடுவே துளையிட்டு அதில் ஒரு தருப்பை புல்லைச் செருகி விடுவர். அத்துளையின் மூலம் நீர், பால், நெய் ஆகியவற்றைச் சிறுசிறு துளிகளாகச் சிவபெருமானின் தலைமீது விழுமாறு செலுத்துவது தாரா பூஜை எனப்படும். பாலைச் செலுத்தினால் க்ஷீரதாரை எனவும், நீரைச் செலுத்தினால் ஜலதாரை எனவும், நெய்யைச் செலுத்தினால் கிருத தாரை எனவும் கூறுவர். முற்காலத்தில் திருவிதாங்கூர் அரசர்கள் பன்னிரு சிவாலயங்களிலும் முறைப்படிக் கிருத தாரை நடைபெற ஏற்பாடு செய்திருந்தனர். இதற்காக நெய்யின் அளவும் குறிக்கப்பட்டிருந்தது. சிவராத்திரியன்று கிருததாரை என்ற இச்சடங்கு விமரிசையாக நடைபெறும்.

பன்னிரு சிவாலயங்களையும் ஒரே இரவில் கோவிந்தனின் திருநாமத்தை உச்சரித்தவாறு தரிசிப்பது போற்றத்தக்கது. இறுதியில் திருநட்டாலம் சங்கர நாராயணரையும் சுசீந்திரம் தாணுமாலயரையும் வழிபட்டு மும்மூர்த்திகளின் அருளையும் பெறுகின்றனர். சைவ, வைணவ ஒற்றுமைக்கு இச்சிவாலய ஓட்டம் ஒரு சிறப்பான எடுத்துக்காட்டாகும். 

---

## பித்தன் என்ற பேர் ஏன்?

சிவபெருமான் பித்தன் என்ற பேர் பெற்றதற்கு மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை ஒரு காரணம் கூறுகிறார்.

தண்ணீருள் ஒருவன் விழுந்தால் தண்ணீர் உடனே அவனைக் கொல்லாது. மூன்றுமுறை அவன் தலைதூக்கி எழ உதவும். தண்ணீரும் மூன்று முறை பிழை பொறுக்கும் என்ற பழமொழியும் வழங்குகிறது. இதனைக் கருத்தில் கொண்டே மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை திருவானைக்காவல் அகிலாண்டநாயகியை நோக்கி "அம்மா! கோடானுகோடி பிழைகளை நீ பொறுத்து அருள்புரிகின்றாய். ஆனால் மூன்றே பிழை பொறுக்கும் கங்கையை சிவனார் தலைமீது வைத்து கூத்தாடுகிறார். பலகோடிப் பிழைப் பொறுக்கும் உன்னைத் தன்பாதி உடம்பில் வைத்தார். இது என்ன நியாயம் ? இது என்ன நீதி? இதனால் அல்லவா சிவனாரை உலகம் பித்தன் என்று பேசுகிறது. இல்லை, ஏசுகிறது." பிள்ளையவர்களின் பாடலைக் கேளுங்கள்.

"அளவறு பிழைகள் பொறுத்தருள் நின்னை<br>
அணியுருப் பாதியில் வைத்துத்<br>
தளர்பிழை மூன்றே பொறுப்பவள் தன்னைச்<br>
சடைமுடி வைத்தனன் அதனால்<br>
பிளவியன் மதியஞ் சூடிய பெருமான்<br>
பித்தனென் றொருபெயர் பெற்றான்<br>
களமலர்மொய் கழனி சூழ்திரு வானைக்<br>
காவகி லாண்ட நாயகியே"

தகவல் - ஆர். சுப்பாராவ்- திருக்கோயிலூர்.



தி.தி. தேவஸ்தானத்தாரின்

# ஸ்ரீபாலாஜி ஆரோக்ய வரபிரஸாதினி திட்டம்

பன்னெடுங்காலமாக, ஸ்ரீவேங்கடேஸ்வரசுவாமி நின்றவண்ணம் அருள் புரிந்திடும் திருமலையானது புகழ்பெற்ற ஒரு புனிதத்தலமாக விளங்கி வருகிறது. தங்களுடைய மனக்குறைகள் மறையவும், பிரச்சனைகள தீரவும் நாளதோறும் ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் திருமலைக்கு வந்த வண்ணம் இருக்கின்றனர்.

வாழ்க்கையில் இயற்கையின் கொடுமையால் பல வகைகளில் துயருறும் மனிதர்களுக்கு உதவிடும் வகையில் தி.தி. தேவஸ்தானம் பல திட்டங்களை மேற்கொண்டு வருகின்றது. இந்த வகையில் மருத்துவமனைகள், தொழுநோய் விடுதிகள், உடல் ஊனமுற்றோர் மறுவாழ்வு இல்லம், பார்வையற்றோர் இல்லம் என்று பல நற்பணி அமைப்புக்களை நடத்தி வருகின்றது. மேலும் பொது மக்களுக்கு நவீன மருத்துவ வசதிகள் அமைத்துத் தரும் வகையில், புதுவை - ஜிப்மர், புதுடில்லி அகில இந்திய மருத்துவககழகம், சண்டிகார் - முதுகலை மருத்துவமையம் ஆகியவற்றிற்கு நிகராக தி. தி. தேவஸ்தான வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படும் வகையில் மேலாண்மை ஏழுமலையான் திருவருளால் ஸ்ரீவேங்கடேஸ்வரா மருத்துவ ஆராய்ச்சி நிலையம் ஒன்றினை அண்மையில் திருப்பதியில் நிறுவி உள்ளது. அதிநவீன மருத்துவ சாதனங்களுடன் கூடிய இந்நிறுவனம் ஏழை மக்களுக்குப் பெரிதும் பயன்பட வேண்டுமென்பதே மேலாண்மையின் பெரு விருப்பமாகும். இந்த விருப்பம் பெருமளவில் வெற்றியடைய வேண்டுமென்றால் இரக்கமுள்ள மக்களின் முழு ஒத்துழைப்பும் தேவை. இதனை மனதிற்கொண்டு "ஸ்ரீபாலாஜி ஆரோக்யவரபிரஸாதினி" எனும் புதிய திட்டத்தை தி.தி. தேவஸ்தான மேலாண்மை புகுத்தியுள்ளது.

### திட்டச் சுருக்கம்

இத்திட்டத்திற்கெனப் பொதுமக்கள் ரூ. 1000/- அல்லது அதைப்போல பன்மடங்கு, / ரூ. 1 இலட்சம்,/ 5 இலட்சம்,/ 10 இலட்சம் என தி.தி. தேவஸ்தானத்திற்கு நன்கொடை அளித்தால், அந்தத் தொகைக்கு ஈடாகத் தன்பங்காக தேவஸ்தான மேலாண்மையும் நிதி ஒதுக்கி, மொத்த தொகையானது தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் முதலீடு செய்யப்படும். அத்தொகைக்கு வரும் வட்டித்தொகை மேற்படித் திட்டத்திற்குப் பயன்படுத்திக் கொள்ளப்படும்.

ரூ. 10 இலட்சம் அல்லது அதற்கு மேற்பட்டு நன்கொடை அளிக்கும் நபர்களின் பெயரைக் கொண்டு இவ் ஆராய்ச்சி நிறுவனத்தில் ஆராய்ச்சி பதவி ஒன்று அமைக்கப்படும்.

தனிநபர், குடும்பம், நிறுவனம், கழகம் பெயர்களில் நன்கொடை அளிக்கலாம்.

ரூ. 5 இலட்சம் மற்றும் அதற்கு மேற்பட்டு நன்கொண்ட அளிக்கும் நபர்களின் பெயர்கள் மருத்துவமனை வரவேற்பு அரங்கில் காட்சியாக்கப்படும்.

பயன்பெறும் நோயாளிகளின் அடையாள அட்டையில் நன்கொடையாளரின் பெயர் அச்சடிக்கப்படும்.

### மற்றைய பயன்களும், வசதிகளும்

இத்திட்டத்திற்கென வழங்கப்படும் நன்கொடைக்கு வருமானவரிச் சட்டப் பிரிவு 80 (G) கீழ் வருமானவரி விலக்கு அளிக்கப்படும்.

நன்கொடையாளர்களின் குடும்ப நபர்களுக்கு கட்டண அறைகள் / குளிர்ச்சாதன அறைகள் மருத்துவமனையில் ஒதுக்கப்படும்.

ரூ. 5 இலட்சம் அல்லது அதற்கு மேற்பட்டு அளிக்கப்படும் நன்கொடையாளர்களின் பெயர்கள் கட்டண அறைகளுக்கு வைக்கப்படும்.

ரூ. 5 இலட்சம் நன்கொடை அளிக்கும் நபர்களின் பரிந்துரை பேரில் ஆண்டு ஒன்றுக்கு அறுவை சிகிச்சை வசதி ஒன்று அளிக்கப்படும்.

இத்திட்டத்திற்காக அளிக்கப்படும் நன்கொடை தொகையானது "Executive Officer, T.T.D. Tirupati" எனும் பெயரில் வங்கி காசோலை மூலம் செலுத்தப்பட்டு, அதனை "Director, Sri Venkateswara Institute of Medical Sciences, Tirupati" எனும் முகவரிக்குக் கீழ்க்காணும் தகவல்களுடன் அனுப்புதல் வேண்டும்.

ரூ.1 இலட்சம் அல்லது அதற்கு மேற்பட்டுத் தொகை வழங்கும் நன்கொடையாளர்களின் குடும்ப நபர்களின் (மார்பளவு) புகைப்படங்களும் மற்றும் முழுமுகவரியும் அனுப்புதல் வேண்டும்.

வருமானவரி விலக்குச்சான்றிதழ் அளிக்கப்பட வேண்டியவரின் பெயர், முகவரி தகவல்களை அனுப்புதல் வேண்டும்.

**The Executive Officer, T.T. Devasthanams, Tirupati.**

அல்லது

**The Director, Sri Venkateswara Institute of Medical Sciences, Tirupati.**

# மநு தர்ம சாஸ்திரம்

திரு. க. சுகுமாரன் - திருவாரூர்

ஆதி தர்ம சாஸ்திரமான மநு தர்ம சாஸ்திரமே தர்ம சாஸ்திரங்களில் முதன்மையானது. தொன்மையாலும், வேதத்தின் ஒப்புதல் பெற்றமையாலும் இந்தத் தனிச் சிறப்பு இதற்கு அமைந்துள்ளது. மநு தர்ம சாஸ்திரத்தை இயற்றியது யார்? 'தர்மம்' என்பதைப் போலவே, 'மநு' என்ற பெயரும் மிக மிகப் புராதனமானது. ருக் வேதத்தில் நான்கு மநுக்கள் குறிக்கப்பெற்றுள்ளனர். பகவத் கீதையும் நால்வரையே கூறுகின்றது. ஆனால் இந்து தர்ம சாஸ்திரப்படி மநுக்கள் எழுவர் என்றும், நாம் ஏழாவது மநுவின் காலத்தில் உள்ளோம் என்றும் கூறப்படுகிறது. மனுவே தர்ம சாஸ்திரம் இயற்றியவர என்றும் மானிட சமுதாயத்தின் பிதாமகன் என்று கூறப்படுகின்றார். இவற்றிலிருந்து அவருடைய தெய்வத் தன்மையை உணரலாகும். பாரத நாட்டில் தொன்று தொட்டு வழங்கி வரும் வரலாற்றுக் கதைகளைக் கூர்ந்து கவனித்தால், மநு ஒரு தனி மனிதர் என்றில்லாமல், அது அறம் வகுக்கும் அன்னலின் பதவி அல்லது பட்டம் என்று தெரியவரும். பாரத சமுதாயத்தின் வளர்ச்சிக்கு வழி வகுத்து அவ்வக்காலத்தில் - அதாவது பல மன்வந்தரங்களில் அச்சமுதாயம் நெறியின் புறம்பாகச் செல்லாது காத்து வந்த தெய்வீகப் புருடர் யாவருமே மநுக்கள் தாம். இந்தக் கருத்துப்படி, எகிப்து, பாரசிகம், கிரேகக நாடு, ரோம் ராஜ்யம் முதலியவற்றில் எல்லாம் தர்ம சாஸ்திரங்கள் வகுத்தவர்கள் எல்லாம் அந்தந்த நாட்டு மநுக்களே ஆவர். மனத்தாற் சிந்திப்பவன் மனிதன்; சிந்திப்பவர்களாகிய மககட் சமுதாயத்திற்குச் சட்டம் வகுத்தவர் மநு. மன், மனம், மனிதர், மநு என்ற முறையில் பெயரும் மிகப் பொருத்தமாகவே அமைந்திருக்கின்றது. மநுவும் அவர் வழித் தோன்றல்களும் சூட்சும உலகங்களிலிருந்து ஆட்சி புரிந்து வருவதாகப் புராணங்கள் கூறுகின்றன. மக்களின் சூட்சுமமான மனங்களில் அவர்களின் ஆட்சி இன்றும் நடந்து கொணடு தானிருக்கிறதல்லவா?

மநுவின் அறநூல் வெறும் சட்டப்புத்தகமன்று, ஆன்மார்த்திக ஞானம், மனோதத்துவம், ஒழுக்கவியல், உயிரினங்களின் வாழ்வும் வளர்ச்சியும், பொருளியல், அரசியல் ஆகிய பல துறைகளையும் பற்றி வேதங்களில் பலவிடங்களில் பலவாருகச் சிதறிக் கிடப்பவற்றைத் திட்டமாகவும், நுட்பமாகவும் முறைப்படுத்தித் தொகுத்துக் கூறுவதே மநுதர்ம சாஸ்திரமாகும். இதற்கும் முதல் நூல் இருந்திக்கிறது. அது லட்சம் சுலோகங்களைக் கொண்ட 'மானவ தர்ம சாஸ்திரம்'. வாய்மொழியாகப் பயின்று வந்த அப்பெருநூலிருந்து சிதைவுற்று மிஞ்சியதே இப்போதுள்ள மநு தர்ம சாஸ்திரம்.

## இலட்சியம்

மநுதர்ம சாஸ்திரத்தின் லட்சியம் யாது? வேதங்களின லட்சியம் எதுவோ, எல்லா தரமங்களின் லட்சியம் எதுவோ அது வேதான் இதன லட்சியமாகும். ஆறறிவு பெற்ற மக்கட் தொகுதியினர் சமுதாயமாக இணக்கமுற்று, வாழ்ந்து வளரசசி பெற, வேலிகளிட்டு பாதைகளமைக்கப்பட்டிருக்கின்றன. தீவினைகளால் நசித்தலின்றிச் சமுதாய வாழ்வுககும் வளர்சசிக்கும் விதிகள அமைத்திருப்பதுடன், தகக பருவமடைந்த பின தனி மனிதர்கள சமுதாயததிலிருந்து பிரிந்து, தத்தம் ஆன்மா கடைத்தேற மேற்கொளவதற்குரிய வழியையும் இது காட்டுகிறது. எனவே இந்நூலின் நோக்கம் விடுதலை - பேரினபம் - முக்தியேயாகும். இது வெறும் சட்டங்களின் குவியலன்று. எந்தப் பரம்பொருளில் இருந்து எல்லாம் கிளைத்தெழுந்து வந்தனவோ அதிலேயே யாவும் ஒடுங்கப்பெறுதலே முக்தி. அந்தக் குறிக்கோளை மநு தர்ம சாஸ்திரம் முழுவதும் காணலாம்.

பிறப்பு இறப்புகள், இன்ப துன்பங்கள் யாவற்றையும் தாண்டிப் பேரின்பநிலை அடைவதை நம்மவர் நான்கு புருடார்த்தங்களாக வகுத்துள்ளனர். அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பன. இந்நூல் அறத்தை விளக்குகின்றது. பொருள் செய்யும் வகையைக் கூறுகின்றது. இன்பம் துய்த்தலை விவரிக்கின்றது. இம் மூன்றையும் விட்டு விடுத

லையாதும வீட்டு வழியையும் காட்டுகின்றது.

## அரசியல்

அரசியலைப் பற்றி மநு மிக விரிவாகக் கூறியுள்ளார். அரசன தெய்வாம்சமாயினும், அவன தரமத்திற்கும் மக்களுக்கும கட்டுப்பட்டவன். காலை முதல இரவு முடிய அவனுக்குரிய தினசரிக் கடமைகள் விதிக்கப்பட்டுள்ளன. மந்திரி சபை, அரசாங்க உத்தியோகஸ்தர்கள், நீதிமன்றம், வழக்குகளை முடிவு செய்யும் முறைகள் ஆகிய விஷயங்களைப் பற்றி இந்நூலில் கூறப்பெறறுள்ள கொள்கைகள் பிற்காலத்தில் பல நாடுகளுக்கும் வழிகாட்டிகளாக அமைந்தவை. மொத்தத்தில் மநுவின் அரசியல் முறை தனி ஆராய்ச்சிக்குரிய பெரிய விஷயமாகும்.

## உலகப்புகழ்

மநுதர்ம சாஸ்திரத்தின் கொள்கைகளும், தத்துவங்களும் முற்காலத்தில் ஆரியர் சென்ற நாடுகளிலெல்லாம் பரவியிருந்தன. ஈரான் எனப்படும் பாரசீக நாட்டிலும், எகிப்திலும், பாலஸ்தீனத்திலும் அவை பரவியதற்கு ஆதாரங்கள் தென்படுகின்றன. பல்லாயிரம் வருடங்களாக இந்தியாவுடன் வர்த்தகத் தொடர்புள்ள கிரேக்க நாட்டிலும் மநு பயிலப்பட்டிருந்தார். புகழ்பெற்ற சரித்திர ஆசிரியரான 'ஹிரோட்டோட்டஸ்' 'நான்கு வகுப்பார்கள்' என்று அடிக்கடி குறிப்பிட்டிருப்பது மநுவின் நான்கு வருணத்தாரகவே இருத்தல் கூடும். கிரேக்கத் தத்துவ ஞானியான பிளேட்டோவின் 'உரையாடல்கள்' என்ற நூல் பாரத நாட்டு வேதங்கள், உபநிடதங்களைப் போன்ற மெய்ஞ்ஞான ஆராய்ச்சியாக விளங்குவதை 'ஸர்வில்லியம் ராம்ஸே' என்ற அறிஞர் சுட்டிக்காட்டியிருக்கிறுர். மநு பிராமண், சத்திரிய, வைசியரென்று மக்களைப் பகுத்திருப்பது போலவே பிளா டோவும் வகுத்துக் கூறியுளார். ரோமாபுரி ராஜ்யதிலும் மநுவுக்கு செல்வாக் இருந்ததை அதன் சட்டங்க லிருந்தே தெரிந்து கொள் லாம். கி.பி. 527 முதல் 5 வரை அங்கே ஆண்டு வந் அகஸ்டினியன் சக்கரவர்த் காலத்திலே உருவாக்கப்பெற் ரோமாபுரிச் சட்டங்களில் ம வின் விதிகள் பல அடங்கியு ளன. திருமணம், தந்தையி அதிகாரம், சுவிகாரம், ஒப்பந்த அடைக்கலப்பொருள், கடன்க விற்பனை, கூட்டு ஒப்பந்தங்க முதலிய விஷயங்களில் ம வின் விதிகள் பலவும் அகஸ் னியச் சக்கரவர்த்தியின் சட்ட களில் அப்படியே தூக்கி வை கப்பட்டிருக்கின்றன. அந் ரோமாபுரிச் சட்டங்களை மு மாதிரியாகக் கொண்டே தற்க லத்திலும் மேலை நாடுகளி சட்டங்கள் இயற்றப்பெறுகி றன. பர்மா, மலாய், இந்தோ சியா முதலிய சட்டங்களிலு மநு தர்ம சாஸ்திரம் இட பெற்று இருக்கிறது. இவ்வா உலகப்புகழ் பெற்று விளங்கு மநு தர்ம சாஸ்திரத்தைப் பற் ஜெர்மனியத் தத்துவ ஞான யான 'நீட்ஷே' "பைபிளை மூ விட்டு மநுதர்ம சாஸ்திரத்தை திறந்து பாருங்கள்?" என் கூறியுள்ளார். இது போல் என் ணற்ற புகழுரைகளைக் காண லாம். ஆயினும் மநு கூறி தர்மத்தைப் பற்றியும், அ உலக நாடுகளின் சட்டங்களி எவ்வளவு தூரம் பாதித்து ளது என்பது பற்றியும், விருப் வெறுப்பில்லாத, விரிவான, தி டமான ஆராய்ச்சி இனிமே தான் வெளிவரவேண்டும்.





சீதாராமர் செய்யும் லிங்க பூஜை - இராமேஸ்வரம்.
கே. சீதாராம் - கோவை.

# பகவத் கீதை

நான்காம் அத்தியாயம்

## ஞானகர்ம ஸந்யாஸ யோகம்

உமைப்ரியன்

பகவான் சொன்னது

ச்ரோத்ராதீனிந்த்ரியாண் யன்யே
ஸம்யமாக்னிஷு ஜுஹ்வதி ।
சப்தாதீன்விஷயானன்ய இந்த்ரியாக்-
னிஷு ஜுஹ்வதி ।। (26)

"அடக்குதல் (கட்டுப்படுத்தல்) எனும் நெருப்பினில் சிலர், கண், செவி முதலிய பொறிகளை ஆகுதி (ஹோமம்) செய்கின்றனர். மற்ற சிலர் காட்சி (கண்ணில் தெரிவது) ஒலி (செவியால் கேட்கப்படுவது) போன்ற விஷயங்களை பொறிகள் எனப் படும் நெருப்பினில் ஆகுதி (ஹோமம்) செய்கின்றனர்."

[இங்கு இந்த்ரியங்களை (பொறிகளை) அடக்குதல், அவற்றின்வழி செல்லல் எனும் இரண்டு கருத்துக்கள் கூறப்படுகின்றன. கண், வாய், மூக்கு போன்ற ஐம் புலன்களை அப்புலன்களினால் பெறப்படும் (பார்த்து ரசித்தல், ருசித்து மகிழ்தல், முகர்ந்து இன்பம் காணல் போன்ற) இன்பங்களின் வழி செல்லாமல், அந்த ஐம்புலன்களை அவற்றின் இன்பங்களிலிருந்து விலக்கிக் கட்டுப்படுத்தல் எனும் செய்கை ஒரு வேள்வியாகக் கருதப்படுகிறது. இவ்வாறு புலன்கள் கட்டுப்படும்போது, மனம் தடுமாறுவதில்லை. அது ஞான நிலை பெறுகின்றது. அதே போன்று புலன்களை அதன் வழி விடுத்து இன்பங்களை நுகர வழி வகுத்தும் அறிவை, மனதை மேம்படுத்தலாம். அதாவது புலன்களால் பெறப்படும் இன்பத்தைத் துய்க்கும் போது, அவ் இன்பத்தை கடவுளாகவே, இறை உணர்வாகவே உணர்தல் வேண்டும். அதாவது பார்க்கும் காட்சிகளில் இறை உருவத்தையும், கேட்கும் ஒலியில் எல்லாம் இறைவன் திருநாமப் புகழையும், வாய் திறந்திடும் போதெல்லாம் இறைவனின் பெருமைக்குரியன பாடுவதையும் புலனின்பங்களாகக் கொள்ள வேண்டும். ஆகவே முந்தைய இரு வழிகளாகிய அடக்குதல், அனுசரித்தல் ஆகியன இறுதியில் இறை இன்பத்தையே தந்து, அறிவை ஞானத்திற்கு இட்டுச்செல்கின்றன.]



ஸர்வாணீந்த்ரியகர்மாணி
ப்ராணகர்மாணி சாபரே ।
ஆத்மஸம்யமயோகாக்னௌ
ஜுஹ்வதி ஞானதீபிதே ।। (27)

"மற்றும் சிலர் புலன் வினைகளையும், பிராண வினைகளையும், மனதை ஆத்மாவிடம் அடக்குதல் எனும் ஞானப் பேரொளி வீசிடும் யோகத்தீயில் ஆகுதியாகத் தருகின்றனர்".

[மனமானது வெளியுலக இன்பங்களுக்கு அடிமையானது அல்ல. அது ஆன்ம உயர்வுக்கே வழிவகுக்க வேண்டும் என்ற சிந்தனையே விவேகமாகும். எண்ணெய் ஊற்றுமிடத்து விளக்கானது பிரகாசிக்கும். அதே போன்று விவேகம் எனும் எண்ணெய் ஊற்றுமிடத்து, ஞானம் எனும் பெரு விளக்கு சுடர்விட்டுப் பிரகாசிக்கும். எப்படி ஊற்றப்படும் எண்ணெய்யானது விளக்கின் ஒளியாக மாறுகிறதோ, விவேகமும் ஆத்மாவுடன் ஒன்றாகக் கலந்து

ஆத்ம ஞானம் உண்டாகின்றது. அஞ்சு ஐம்புலன் வினைகளும், பிராண வினைகளும் தங்கள் செயல்திறன் இழந்து அவையும் ஆத்ம சொரூபமாக மாறி விடுகின்றன. அதுபோது கீழான மன இயல்புகளும், செயல்களும் மேன்மை அடைகின்றன. இங்கு பிராண வினை என்பது, உடலெங்கும் மறைந்து ஆனால் செயல்பட்டுக் கொண்டிருக்கும் உயிர்ச்சக்தியாகும்.]

*த்ரவ்யயக்ஞாஸ்தபோயக்ஞா*
*யோகயக்ஞாஸ்ததாபரே ।*
*ஸ்வாத்யாய ஞானயக்ஞாஸ்ச*
*யதய: ஸம்சிதவ்ரதா: ॥ (28)*

"பொருள் வேள்வி, தவ வேள்வி யோக வேள்வி ஆகியன செயவர் சிலர். தன்னடக்கமும், உறுதியுடன் கூடிய விரதமும் கொண்ட மற்ற சிலர் கற்றல், அறிதல் போன்றவற்றையும் வேள்வியாகச் செய்வர்".

[நேர்மையான முறையில் சம்பாதித்து, அதனை நல்ல கார்யங்களுக்காகச் செலவிடுதல் போன்ற செய்கைகள் பொருள் வேள்வியாகும். எவ்வாறு இரும்பை உருக்கிப்புதுப்பிக்கின்றோமோ அதே வழியில் மனதை தெய்வ சிந்தனையில் செலுத்தி அதனைப் பக்குவப்படுத்தி, அதனை தெய்வீகமாக்க வேண்டும். இது ஒரு தவம் செய்வதற்கு ஒப்பாகும். இது போன்ற தவங்களை மேற்கொள்வதே ஒரு புனித வேள்வியாகும். அஷ்டாங்கம் எனப்படும் எட்டுவகை யோகங்களை மேற்கொள்ளுவதை ஒரு வேள்வியாகக் கொள்வர் ஒரு சிலர். அறவழியில் நின்று சாத்திர நூல்களையும் படிக்கும் அளவு ஒருவன், தன்னடக்கத்தைப் பெற்றவனாகின்றான். மேலும் தன்னுடைய வாழ்க்கையை செம்மையாக நடத்திட வேண்டுமென்ற உறுதியை ஒரு விரதமாகக் கொள்ள வேண்டும். கற்றோர் இயற்றிய நூல்களைப் படிப்பதையும், அப்படிப்பினால் தான் பெற்ற கல்வியை- அறிவை பிறர்க்கு வழங்குவதையும் ஒரு வேள்வியாக மேற்கொள்ள வேண்டும். அதுபோது அவனிடம் நூலறிவும், அனுபவ அறிவும் வளருகின்றன. இதுவே யாகத்தின் பெருமையும் உண்மையும் ஆகும்.]

*அபானே ஜுஹ்வதி ப்ராணம்*
*ப்ராணேऽபானம் ததாபரே ।*
*ப்ராணாபானகதீ ருத்த்வா*
*ப்ராணாயாமபராயணா: ॥ (29)*

"அபான வாயுவில் பிராணனையும், பிராண வாயுவில் அபானனையும் ஆகுதி (ஹோமம்) செய்பவர்கள் பிராண அபான வாயுக்களின் வழியைத் தடுத்து, பிராணாயாமத்தை மேற்கொள்கின்றனர்."

[மனத்திற்கும் மூச்சுக் காற்றின் இயல்புக்கும் மிகுந்த தொடர்பு இருக்கிறது. ஆகையால், மனம், தெளிவாக அமையும் போது மூச்சுக்காற்றும் சீராக அமையும். ஒருவன் மனதில் தீய உணர்வுகள் (பயம், கோபம்) தோன்றிடும் போது, அவனுடைய மூச்சுக்காற்றின் போக்கும் தடுமாற்றம் பெறுகின்றது. மனதில் நல்ல உணர்ச்சி

*Statement about ownership and other particulars about*

**SAPTHAGIRI**
**(MONTHLY)**

FORM IV
( *See Rule* 8)

| | | | |
|---|---|---|---|
| 1 | Place of publication | ... | TIRUPATI. |
| 2 | Periodicity of its publication | ... | Monthly |
| 3 | Honorary Editor | ... | Sri D.V.L.N. Murthy, I.A.S. Executive officer, T.T.D. |
| 4 | Printer's Name | ... | Sri M. Vijayakumar Reddy |
| | (Whether citizen of India ) | ... | Yes |
| | Address | ... | Manager, T.T.D. Printing Press, Tirupati. |
| 5 | Editor & Publisher's Name | ... | K. Subba Rao, M.A., |
| | (Whether citizen of India ) | ... | Yes |
| | Address | | Editor, T.T.D. Sapthagiri Journal, Tirupati. |
| 6 | Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital. | ... ... | Tirumala Tirupati Devasthanams represented by its Executive Officer T. T. D. Tirupati. |

*I, K. Subba Rao, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.*

**(Sd.) K. SUBBA RAO,**
**EDITOR & PUBLISHER,**
*Tirumala Tirupati Devasthanams, Tirupati.*

TIRUPATI,
*Date*: 28-2-1994

கள் (மகிழ்ச்சி, அமைதி) அமைந்திடும் போது, அவனுடைய மூச்சுக்காற்றின் போக்கு ஒழுங்காக இருக்கின்றது. ஆகவே மன நிலையின் அமைதிக் கேற்ப, ஒருவனுடைய மூச்சுப்போக்கும் விளங்குகின்றது. இதனால் மூச்சுப்போக்கினை ஒழுங்காக, சீராக, அமைதியாக வைத்துக் கொண்டால், மனமும் அமைதியாக தடுமாற்றம் இல்லாமல் விளங்கும் என்பது பெறப்படுகின்றது. இதனை நன்கு அறிந்தவர்களால் மட்டுமே பிராணயாமம் எனும் யோகத்தினை மேற்கொள்ள முடியும். மூக்கின் வழியாகப் பெறப்படும் மூச்சுக்காற்றிற்கு அபானன் என்று பெயர். வெளியேற்றப்படும் காற்றிற்கு பிராணன் என்று பெயர். மூச்சுக் காற்றினை உள்ளுக்குள் இழுத்தப்பிறகோ, வெளியில் விடப்பட்டப்பிறகோ, (அக்காற்றினை) அடக்கும் முறைக்கு 'கும்பகம்' என்று பெயர். இக்கும்பகம் எனும் பயிற்சியினை ஒழுங்கான, அமைதியான மனநிலை உள்ளோர் மட்டுமே எளிதில் மேற்கொள்ள முடியும். அபானனையும், பிராணனையும் ஒன்ருகச் சீராகக் கலந்து மூச்சு விடுதலே பிராணுயாம் என்று பெயர். இப்பயிற்சியினை, சாப்பிடுபோது கையும் வாயும் எவ்வாறு, சாப்பிடும் ஒருவனுக்கு, அவை வேலை செய்கின்றன என்ற நிலையில்லாமல், தானாக இயங்குகின்றதோ அதே போன்று, இப்பிராணுயாமம் செயல்படவேண்டும். ஆகவே இதற்கு மனத்தெளிவு, கட்டுப்பாடு மிகவும் அவசியம்.]

அபரே நியதாஹாரா: ப்ராணுன்
ப்ராணேஷு ஜுஹ்வதி ।
ஸர்வேऽப்யேதே யக்ஞவிதோ
யக்ஞக்ஷபிதகல்மஷா: ।। (30)

"முறையாகச் சாப்பிடுபவர்கள் சிலர் பிராணனில் பிராணனை உண்டாக்குகின்றனர். வேள்வியை (யாகத்தை) அறிந்தவர்களான இவர்கள், வேள்வியால் பாவத்தை அழித்தவர்களாவார்கள்."

[விபத்தில் அடிப்பட்டு இரத்தம் அதிகமாக வெளியேறிவிட்ட நிலையில், அவன் ஆற்றலும், உணர்வும்பெற, உடனடியாக மற்ஞெரு நபரின் இரத்தம் கொடுக்கப்படுகிறது. இங்கு இரத்தம் அடிப்பட்டவனுக்கு உணவாகிறது. இந்த இரத்தம் சாப்பிடும் உணவில் உள்ளது. உடலில் உயிர்வாழ வெளியிலிருந்து உணவெனும் உயர் அவ்வுயுருடன் சேர்க்கப்படுகிறது. ஆகவே உயிரைக் கொண்டு உயிர் வளர்க்கப்படுகிறது. மனிதனின் இந்த வளர்க்கும் பணி அவன் வாழ்க்கையில் ஒரு யாகமாக (வேள்வியாக) எண்ணப்படுகிறது. மனிதனின் மன இயல்புக்கேற்றவாறு இது போன்ற பல்வேறு யாகங்கள் மேற்கொள்ள வேண்டியுள்ளது. உலகப்பற்றிலிருந்து விடுதலை பெற, இதுபோன்ற வேள்விகளை மேற்கொள்வதே சிறந்த வழியாகும்.]

யக்ஞசிஷ்டாம்ருதபுஜோ யாந்தி
ப்ரஹ்ம ஸநாதனம் ।
நாயம்லோகோऽஸ்த்யயக்ஞஸ்ய
குதோऽன்ய: குருஸத்தம ।। (31)

"குருகுலத்தலைவனே (சிறந்தவனே) வேள்வியில் (இறுதியில்) மீதியாகும் அமுதத்தை உண்பவர்கள் அழியாத பொருளாகிய பிரம்மத்தை அடைகிருர்கள், வேள்வி செய்யாதவர்களுக்கு இந்த உலகமே இல்லை என்னும்போது, அந்த உலகம் (மேலுலகம் எனும்) ஏது?"

[மனிதப்பிறவி பிறர்க்கு நன்மை ஏற்படும் வகையிலேதான் அமைய வேண்டும். இல்லையெனில் மற்றைய உயிரினங்களுக்கும் அவனுக்கும் வேறுபாடு இருக்காது. இந்த உதவும் உணர்வானது தான், தனது எனும் தன்னல உணர்வுகள் மறையும் போதுதான் உருவாகும். இந்த தன்னல உணர்வுகளை விட்டுவிடுவதே ஒரு வேள்வி செய்வதற்கொப்பாகும். இங்கு அவன் தன்னையே ஆகுதியாகக் கொடுக்கின்ருன். இதனால் அவன் அடையப்பெறுவது பிரம்மம் ஆகும். ஆகையால் அந்தப்பிரம்மத்தையே அடையும் போது, அதனைவிடக் கீழானதாகக் கருதப்படும் எதனையும் அந்த யாகத்தால் பெறலாம் என்பது முடிவு.]

ஏவம் பஹுவிதா யக்ஞா விததா
ப்ரஹ்மணோ முகே
கர்மஜான் வித்தி தான்ஸர்வானேவம்
ஞாத்வா விமோக்ஷ்யஸே ।। (32)

"இவ்வாருக வேதத்தில் பல்வேறு வேள்விகள் விளக்கப்பட்டுள்ளன. அவை யாவும் வினையில் தோன்றினவென்று அறிந்து விடுதலை பெறுவாயாக."

[வாழ்க்கையின் இலக்கணங்களை இயற்கைப்படம் பிடித்துக்காட்டுகிறது. இயற்கையை அறிந்தவன் வேதத்தை அறிந்தவனாகின்ருய். இயற்கை வினை வடிவமாக இருக்கின்றது. அந்த வினையும் ஒரு குறிக்கோளுடன்தான் முடிக்கப்படுகிறது. செய்யும் வினைகளை ஒரு புனித வேள்வியாகக் கொண்டு செய்து முடிப்பவர்கள் அந்த இயற்கையின் - வேதத்தின் குறிக்கோளை அறிந்தவர்களாகின்றனர். வினை மனிதனை பாசம், பற்று

எனும் உணர்வுகளுக்கு அடி மையாகக் கூடியது. அதே வினையை ஒரு புனித வேள வியாகச் செய்யும்போது தளைக ளிலிருந்து நம்மை விடுவிக்கின றது.]

*ச்ரேயான த்ரவ்ய மயாதயக்-*
*ஞாஜ்ஞானயக்ஞ: |*
*ஸர்வம கர்மாகிலம பார்தத*
*ஞானே பரிஸமாப்யதே || (33)*

"பரநதபா (எதிரிகளைத துன் புறுததுபவனே), பொருளைக் கொண்டு ஆற்றும் வேள்விக ளைவிட ஞானவேளவியே சிறந் ததாகும. பார்த்தா! வினையா வும ஞானத்தில (பேரறிவில்) முடிவு பெறுகின்றது."

[ஒருவன பொருள் ஈட்டுமளவு, தன பிரச்சனைகளுக்கும் இறுதி யில துன்பத்திற்கும் தானே காரணமாகின்றான். தான் சேர்த்து வைக்கும் தங்கமோ, மனைகளோ ஒருவனுடைய தாகத்தையோ ஒருவேளை பசி யையோ தீர்த்துவிடாது. ஒரு குவளை நீரும், ஒரு வாய் சோறுமோ அவனுடைய மேற்கூ றிய பிரச்சனையை தீர்த்திடும். ஆம், குறிப்பிட்ட அளவுக்குமேல் சேர்த்துவைக்கும் பொருள் அவ னுக்கு தனிப்பட்ட விதத்தில், தேவையற்றதாகும். அதே சம யத்து ஞானமோ அதன் வளர்ச் சியோ வினைக்குக் கட்டுபடாத ஆத்ம வளர்ச்சிக்கு அடிகோலு கின்றது. ஆகவே செய்யும் வேள்வி யாவும் ஞான வேள் வியாகச் செய்யப்படவேண்டும். இதுவே மனித உயர்வுக்கு இட் டுச் செல்லும் அணுகு முறை யாகும்.]

*தத்வித்தி ப்ரணிபாதேன*
*பரிப்ரச்னேன ஸேவயா |*
*உபதேக்ஷ்யந்தி தே ஞானம்*
*ஞானினஸ்தத்வதர்சின: || (34)*

"பணிவாக இருந்தும், கேட்ட றிந்தும, தொண்டு புரிந்தும் அதனை நீ அறிவாயாக. உண் மையை அறிந்த ஞானிகள் உனக்கு அந்த ஞானத்தைப் புகட்டுவார்கள்."

[ஞானமாகிய பேரறிவை எவ ராலும பொருள் கொடுத்துப் பெறமுடியாது. அல்லது மற் றொரு பொருள் கொடுத்தும் பெறமுடியாது. ஞானத்தைப் புகட்டும் ஞானியான குருவின் பால் பணிவு இருக்கவேண் டும். விடுபேறு எனும் மோட் சம், பற்று, ஆத்மா, ஆத்மா அல்லாதது என்பனப் பற்றியே சந்தேக விளக்கக் கேள்விகளை ஒருவன் எழுப்புதல் வேண்டும். ஆம் அவற்றைப் பற்றி அறிய அவன் ஆவல் கொள்ள வேண் டும். அப்போதுதான், கேட் பவனுடைய மனநிலை, அறி வுநிலை ஏற்றவாறு குருவான வர் அவனுக்கு விளக்குவார். குருவுக்குத் தொண்டு புரி வதன் மூலம், அவனுடைய வாழ்க்கை புனித வேள்வியில் தன்னை ஆகுதியாக்கிக் கொள் கின்றான். ஆகவே சிஷ்யனா வன் தன் குருவுக்கு மனம், மொழி, உடலால் சேவை செய் யவேண்டும். அப்போது, குரு வானவர் தான் கற்றதை, தான் கண்டதை தன் சிஷ்யனுக்குக் கருணை கொண்டு கற்பிக்க முடி யும். முழுஞானமும், கருணை யும் கொண்டவர்தான் சிறந்த குருவாக ஏற்கப்படுவார். குரு வானவர் எரியும் (ஞான) விளக்கு. அவ்விளக்கால்தான் மற்றொரு விளக்கை (சிஷ்யனை) ஏற்றிடமுடியும்.]

*யஜ்ஞாத்வா ந புனர்மோஹமேவம்*
*யாஸ்யஸி பாண்டவ |*
*யேன பூதான்யசேஷேண*
*த்ரக்ஷ்யஸ்யாத் மன்யதோ மயி || (35)*

"அந்த குருவால் வழங்கப் பட்ட ஞானத்தைப் (மெய்ய றிவை) பெற்றபின் நீ இவ் வாறு குழப்பமடைய மாட்டாய். அந்த மெய்யறிவால் இந்த உல கத்தின் எல்லா உயிர்களையும் உன்னிடத்திலும் என்னிடத்தி லும் பார்ப்பாய்".

[சாதாரண உலகாயுத ஆசை யில் மூழ்கியிருப்பவனால், பந்த பாசங்களால் சூழப்பட்ட வனால் பொருள்களை உள் ளதை உள்ளவாறு காணமுடி யாது. ஆகையால் மனதில் மயக்கமும், குழப்பமும் உண்டா கிறது. அதே சமயத்து, (குரு வினால்) மெய்யறிவு பெற்றவ னால், எல்லா உயிர்களிடத்தும் பொருள்களிடத்தும் அந்தப் பரம்பொருளைக் காணமுடியும்.]

*அபி சேதஸி பாபேப்ய: ஸர்வேப்ய:*
*பாபக்ருத்தம: |*
*ஸர்வம் ஞானப்லவேனைவ*
*வ்ருஜினம் ஸந்தரிஷ்யஸி || (36)*

"பாவம் செய்தவர்களிலெல்லாம் நீ அதிகமான பாவம் செய் தவனாக இருந்தாலும், (அந்த) பாவங்களையெல்லாம் ஞானம் (எனும்) தோணி கொண்டு நீ கடந்துவிடலாம்."

[ஞானம் இல்லாதவன் வினை களை முறைதவறி செய்யும் போது அவன், அவ்வினை களைப் பாவமாக மாற்றிக் கொள்கிறான். ஞானம் உடையவன் அவ்வினைகளை முறையாகச் செய்து புண் ணியமாக்கிக் கொள்கின்றான். மேலும் வினைப்பற்றுலிருந்தும் தன்னை விடுவித்துக் கொள் கின்றான்.]

*யதைதாம்ஸி ஸமித்தோऽக்னிர்*
*பஸ்மஸாத்குருதேர்ஜுன |*
*ஞானாக்னி: ஸர்வகர்மாணி*
*பஸ்மஸாத்குருதே ததா || (37)*

"கொழுந்துவிட்டு எரியும் நெருப்பானது விறகுகளைப் பொசுக்குவது போன்று, அர்ச்சுனா, ஞானத்தீயானது வினைகளையெல்லாம் சாம்பலாக்கி விடும்."

[வெந்துபோன விதை எவ்வாறு முளைக்காதோ, ஞானத்தீயின் முன் பழைய வினைப் பயன் ஒன்றும் செய்யாது. ஆனால் மற்றைய வினைகள் ஞானத்தீயில் வெந்து போகும். ஆகையால் பழைய வினைப் பயன்கள் எதுவும் ஞானத்தை உடைய ஞானியை ஒன்றும் செய்யாது.]

**ந ஹி ஞானேன ஸத்ருசம்**
**பவித்ரமிஹ வித்யதே ।**
**தத்ஸ்வயம் யோகஸம்ஸித்த:**
**காலேனாத்மனி விந்ததி ।। (38)**

"ஞானத்துக்குச் சமமானதும், பரிசுத்தம் செய்யும் ஆற்றலுடையதும் இந்த உலகில் வேறு ஏதும் இல்லை. யோக சித்தி பெற்றவன் போகப்போக தன்னுள்ளே இந்த ஞானத்தை அடைகிறுன்."

[தன் பிறவி பற்றிய உண்மை ஞானத்தை ஒருவன் அடையும் போது, அவன் பிறப்பு இறப்பு பற்றிய மயக்கத்திலிருந்து விடுபட்டுத் தன்னைத் தூய்மையாக்கிக் கொள்கின்றுன். ஆகவே முறையாக தன் வினைகளைப் பற்றற்று, ஒரு ஞான வேள்வியாக மேற்கொண்டு செய்பவன் காலப்போக்கில் ஞானத்தைப் பெற்றவனாகின்றுன்.] .

ச்ரத்தாவான்லபதே ஞானம் தத்பர:
ஸம்யதேந்த்ரிய: ।
ஞானம் லப்த்வா பராம் சாந்திமசி-
ரேணுதிகச்சதி ।। (39)

"ஈடுபாடு உடையவன், பரத்தைச் சார்ந்திருப்பவன் (ஞானத்தில் நாட்டம் உடையவன்), புலன்களைக் கட்டுப்படுத்தியவன் ஞானத்தை அடைகின்றுன். அந்த ஞானத்தை அடைந்தபிறகு விரைவாக, சிறந்ததான அமைதியைப்பெறுகின்றுன்."

[இந்தச் செய்யுளில் மேலான மெய்யறிவாம் ஞானத்தைப் பெற ஒருவனுக்கு இடைவிடாத முயற்சியும் ஈடுபாடும் தேவை என்று அறிவுறுத்தப்படுகிறது. எவ்வளவுக்கெவ்வளவு ஈடுபாடு தீவிரமாக சிறந்ததாக விளங்குகிறதோ, அந்த அளவு ஞானத்தை எளிதில் பெறமுடியும். ஞானத்தைப் பெற்றவுடன் விடுபேறு எனும் அமைதியை அவன் அடைகின்றுன்.]

அக்ஞஸ்சாச்ரத்ததானஸ்ச
**ஸம்சயாத்மா விநச்யதி ।**
**நாயம் லோகோஸ்தி ந பரோ**
**ந ஸுகம் ஸம்சயாத்மன: ।। (40)**

"அறிவில்லாதவன், ஈடுபாடு இல்லாதவன், சந்தேகம் கொண்டவன் அழிவை அடைகின்றுன். சந்தேகம் கொள்பவனுக்கு இந்த உலகமும் (இம்மை) அந்த உலக (மறுமை) மகிழ்ச்சியும் இல்லை".

[ஆத்மாவின் இயல்பைத் தெரியாதவன் மூடன் ஆகின்றுன். தன்னைத்தானே நம்பாது, தன் ஆசிரியரையும் (குரு) நம்பாது, தான் கற்கும் பாடங்களையும் (சாத்திரங்கள்) நம்பாது ஒருவன் இருந்தால் அவன் மனமும், அறிவும் எதிலும் ஈடுபடாது. அவனால் இந்த மண்ணுலக வாழ்க்கையே ஒரு தோல்வியாக அமையும். பிறரை நம்பாது தன்னம்பிக்கை இல்லாது ஒருவன் மகிழ்ச்சியைப் பெறமுடியாது. வாழ்க்கையில் பிடிப்பு ஒருவனுக்கு, பிறரை நம்பும்போதும், உதவும் போதும்தான் அமையும். அப்போதுதான் ஞானம் அவன் வாழ்க்கையில் கைகூடும்.]

**யோகஸந்யஸ்தகர்மாணம்**
**ஞானஸம்சின்னஸம்சயம் ।**
**ஆத்மவந்தம் ந கர்மாணி**
**நிபத்னந்தி தனஞ்ஜய ।। (41)**

"யோகம் மூலம் வினைகளை அகற்றி, ஞானத்தால் (மெய்யறிவால்) சந்தேகங்களைத் துடைத்து, ஆத்மபோதத்தில் மூழ்குபவர்கள் வினைகளால் கட்டப்படுவதில்லை"

[சேற்றில் இருந்தாலும் எவ்வாறு மீன் மீது சேறுனது ஒட்டிக்கொள்ளாதோ, அவ்வாறே வினை ஆற்றும் யோகிகளை அவ்வினைகள் கட்டுப்படுத்தாது. இந்த வாழ்க்கைப் பற்றிய உண்மையை அறிந்த ஞானியானவன் எதன் மீதும் சந்தேகம் கொள்வதில்லை. அந்த நிலையில் தன்னைத்தானே தெரிந்து கொண்ட முழு ஞானியாக அவன் திகழ்கின்றுன். அதுபோது அவன் வினைகளால் தாக்குறுவதும் அதே சமயத்து, அவன் வினையாற்றுமல் இருப்பதும் இல்லை.]

**தஸ்மாதக்ஞானஸம்பூதம்**
**ஹ்ருத்ஸ்தம் ஞானாஸினாத்மன: ।**
**சித்த்வைனம் ஸம்சயம் யோகமா-**
**திஷ்டோத்திஷ்ட பாரத ।। (42)**

"ஆகவே, அறியாமையால் (அஞ்ஞானத்தால்) ஏற்பட்ட, உள்ளத்தில் உறைந்துள்ள ஆத்மாவைப் பற்றிய, சந்தேகத்தை, மெய்யறிவு (ஞானம்) எனும் வாளால் வெட்டி, யோகத்தை மேற்கொண்டு, பாரதா, எழுவாயாக"

**(48-ஆம் பக்கம் பார்க்க)**

# என்போத நைவேத்தியம்

புலவர் ஆ. சீநிவாசன் - சிறுதாவூர்.

**உ**லகினர் தானும் தன் குடும்பமும் வாழ பொருள் தேடுவதற்காக அல்லும் பகலும் அரும்பாடு படுகிறார்கள். தான் தேடிய பொருளும், கற்ற கல்வியும் தன்னுடைய நலத்திற்கே பயன்பட வேண்டுமென நினைக்குந் தன்மை மேலோங்கிய நிலையில அறவழி அறவே அருகி வருவதை நம்மில் பலர் அறிந்தும் அறியாதார போனறுள்ளோம. சமுதாயத்தில் பறம் மிகும்போது இறை நினைவு குறைகிறது. உடலையும் உலகப் பொருள்களையும் கைம்மாறு கருதாது தந்த இறைவனை நாம் அரை நிமிட நேரமேனும் நினைக்க வேண்டும். எல்லாரும் உடல் வளர்க்க உணவு தேடுவது போன்று உயிர்வளர்க்க இறைவனைத் தேட வேண்டும். உடலை உணவும், உயிரை உணர்வும் வளர்க்கும். உடலும் உயிரும் ஒன்றன்று என்பர் ஆன்றோர். உடலாகிய வீட்டில் உயிர் குடியிருக்கிறது. உடலாய குடியிருப்பை விட்டு உயிர் பிரியும் தன்மையைத் திருவள்ளுவர்,

"குடம்பை தனித்தொழியப்
புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு"

என்பர். முட்டையுள்ளிருந்த புள் வெளியே வந்ததும் உரிய பருவம் வரை கூட்டினுள் வளர்ந்து பறந்து போன தன்மைத்து உடலை விட்டு உயிர் பிரியும் நிலை. உயிர் உள்ளபோதே உடலுக்கு நன்மை விளைய வேண்டுமானால் இறைவனை சிந்தனை செய்ய வேண்டும். உலகில் எத்தகைய பாவத்தைச் செய்தாலும் கழுவாயுண்டு. ஒருவர் செய்த நன்றியைச் சிதைத்தவர்க்குப் பாவத்தின் நீங்கும் வாயில் இல்லையென திருக்குறளால் அறிகிறோம். உடலையும், உடமையையும் தந்த தலைவனை மறப்பது பிழை.

"தன்னை அறிவித்துத்
தான்தானாச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழை"
(சிவஞானபோதம் சூ-12)

"பொன்னே யனைய அருள் தந்தாய்
பொற்பார் திருத்தாள்
தொழுத்தந்தாய்
மன்னே யதனை மறந்திகழ்ந்த
மதியி லேனென் றினியுய் கேன்"
(திருப்போரூர்ச்சந்நிதி முறை)

இறைவனையும் அவனருள் திறத்தையும் சிந்தனை செய்பவன் உயர்வு அடைவான். சைவ சித்தாந்த ஞானபானுவாக விளங்கிய பாம்பன் சுவாமிகள் தாய், தந்தை உடன் பிறந்தவர்கள், மனைவி, மக்கள் சுற்றத்தினர் அனைத்தையும் தனக்கு இறைவனுடைய திருத்தாள்களேயென சிந்தனை செய்வதனையே, வாழ்நாள் வீழ்நாள் படாது தேடிவைத்த பொருளாமென திருவலங்கற்றிரட்டு பாவால் உலகுக்கு உணர்த்துகிறார்.

"தந்தை தாயுஞ் சகோத ரர்களுந்
தார முஞ்சுகு மாரரும்
பந்து வும்மித்திர சொந்த மும்பல்
பவுள்சு நின்பாத மாகவே
சிந்தை செய்ததைத் தேடினேன்றித்
தேடிவைத்த தொன்றில்லையே
கந்தனே யிரும் பாவ லாவள்ளி
காவலாவறி வாயரோ"
(திருவலங்கல்திரட்டு)

இறைவனை உயிர்கள் சிந்தனை செய்யாமல் செய்வது ஆணவ இருள். உலகப்பொருள்களைஎல்லாம் காணவியலாது மறைப்பது இருள். இறைவனை உயிர்கள் அடைய முடியாது மறைப்பது ஆணவ இருள். செம்பிற்கியல்பாகவே களிம்புண்டு. அவ்வாறே மனிதனுக்கும் மும்மலங்களுண்டு.

"ஆணவமே யாருயிர்கட்
குட்பகையென் றறிவார்
அளவறுநா ளூறமூடித்
துயருறவைத் ததனால்"
(திருப்போரூர்ச்சந்நிதிமுறை)

"மனனக மலமற மலர்மிசை
யெழுதரும்" (நாலாயிரம்)

வசைதரு மாமும் மலமற நீதான்
வருவது கடினமெ னாதே"
(திருவலங்கற்றிரட்டு)

ஊரின் நடுவேயுள்ள பாசியால் மூடிய குளத்தில் தண்ணீர் எடுப்போருடைய குடம் ஆழும் போது பாசி விலகி தண்ணீர் தெளிவாக இருக்கும். நீரினின்று குடத்தை எடுத்தபோதே மீண்டும் பாசி பழையபடி மூடிக்கொள்ளும் அஃதே போன்று ஆன்மாக்கள் இறைவனை நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் மும்மலங்களும் விலகி விடுகின்றன. பின்னர் முன்போல் மலங்களால் மறைக்கப்படுகிறது.

இறைவனுடைய நினைவு நிலை பேறுடையதாய் இருக்குமேயானால் இறைவன் ஞான பானுவாய் வருவான். மனத்

தில் ஞானவிளக்கு ஏற்றுவான். ஞானவிளக்கு ஏற்றினவுடனே மும்மலங்களும் நம்மைவிட்டு விலகித் திருவருள் கிட்டும்.

"புந்திக்கு விளக்காய புராணனை"
(தேவாரம்)

"இன்றெனக்கருளி இருள்கடிந்துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று"
(திருவாசகம்)

'ஞானச் சுடர் விளக்கேற்றினேன்
நாரணற்கு" (நாலாயிரம்)

திருவருள் பேற்றினைப் பெற்ற வள்ளலார் சித்திவளாகத்தில் தனக்குக் கிடைத்த திருவருட்பேறு மற்றவர்களுக்கும் வாய்த்தருள் வேண்டுமென்பதற்காக இறைவனிடம் நடுஇரவில் முறையிடுகிறார். பிறர்க்கென வாழ்ந்த பண்புடையாளர் வள்ளலார் என்பதால் "ஆடகப் பொதுவில் நாடகமியற்றும் ஏடவிழ் கூந்தல் இறைவி பாகனும்", மறைகள் தேடும் மறையாளனுமாகிய இறைவன் நடுஇரவில் இவரைத் தேடிச்சென்றார். மறைகளுக்கெட்டாத பாதங்கள் தன்னைத் தேடிவந்ததைக் கண்ணுற்ற அடிகளார் மூர்ச்சையாய் கீழே விழ இறைவன் அவரை எழுப்பி அருளிய செயலை,

"பாதி இரவில் எழுந்தருளிப்
பாவியேனை எழுப்பியருட்
ஜோதி அளித்தென் உள்ளகத்தே
சூழ்ந்து கலந்து துலங்குகின்றாய்
நீதி நடஞ்செய் பேரின்பநிதி
நான்பெற்ற நெடும்பேற்றை
ஓதி முடியாதென் போல் இவ்வுலகம்
பெறுதல் வேண்டுவனே"

எனும் திருவருட்பா பாடலால் அறியலாம்.

தன்னிடமில்லாத பொருளை மற்றவரிடமிருந்து கேட்டுப் பெறுவதும், தன்னிடமுள்ள பொருளை மற்றவர்கட்குத் தருவதும் மக்களின் இயல்புத்தன்மையாகும். அடியாரும் ஆண்டவனிடம் இல்லாத தனக்கே உரித்தான ஐவாய் அவா, சீவபோதம் (உயிர் அறிவு) நிறையப் பெற்றிருக்கிறார்கள். தம்மிடம் இயல்பாகமிகுள்ள மெய்யன்பை இறைவனுக்கு நீராட்டும் மஞ்சன நீராகவும், ஐவாய் ஆசையையும் அவனது பொன்னாரடிக்கே சூட்டும் மலராகவும், பொய்யாத இறை அறிவை உயிர்கள் அறிவதை ஒளிபொருந்திய சுடராகவும் ஏற்றி உயிர் அறிவை (என்போதம்) நைவேத்தியம் செய்ய வேண்டுமென மதுரை அங்கயற்கண்ணம்மை திருவருள் பெற்ற சிதம்பர சுவாமிகள் திருப்போரூர்ச் சந்நிதி முறையில் பாடுகிறார்.

"ஐவாய் அவாவையும் உன்
னாரடிக்கே வைப்பதலர்
மெய்யான அன்பே வியன்சலமாம்-
பொய்யாத
உன்போதத் தாலறிவ
தொன்சுடராம் போரூரா
என்போத நைவேத்தி யம்"

நாம் கடவுளுக்கு நம் சீவபோதத்தை நைவேத்தியம் செய்யச் செய்ய உள்ளத்தில் ஆசையாகிய சங்கிலி அறுபடுகிறது. அவ்விடத்தில் இறைவன் எழுந்தருளி தந்தை தன் மகனுக்கு இன்பம் தருவனவற்றையெல்லாம் காட்டி தனமடிமீது மகனை இருத்துமாபோற் செய்தற் போன்று நம் உள்ளத்தில் கடவுளின் பேரின்பத்தைக் காட்டி பரஞானம் அபரஞானம் ஆகிய பாதங்களின் கீழ் நிலையாக இருக்கும் பேற்றை உயிர்களுக்களித்து தேவர்களெனும் பயிர் தழைத்திட, கொடிய சூரர்களாகிய களைகளைக் களைந்து அருள் பாலிப்பான். திருப்போரூர் முருகனென அருட்பெருஞ் சான்றோராகிய சிதம்பரசுவாமிகள் தாமியற்றிய திருப்போரூர்ச் சந்நிதி முறையில் பாடியுள்ளார்.

"மகவினைத் தாதை யினிமைகள்
காட்டி
மடித்தலத் திருத்துதல் போல
அகமதி லின்பு காட்டிநின் தாள்கீழ்
அடியனை யசைவற இருத்தாய்
ககனவா னோர்க ளெனும்பயிர்
தழைப்பக்
கடியசூர்க் களைகளைந்
தருள்வோய்
உகலரு வளங்கள் திகழ்திருப் போரூர்
உத்தமா சத்திவே லவனே.

## கட்டண உயர்வு

திருப்பதியிலுள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீகோவிந்தராஜசுவாமி கோயிலில் நடைபெறும் பல்வேறு சமயச் சடங்குகளின் கட்டணங்கள் கீழ்வருமாறு உயர்த்தப்பட்டுள்ளன.

| | பழைய கட்டணம் | புதிய கட்டணம் |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| 1) ஸகஸ்ரநாம அர்ச்சனை | 4-00 | 10-00 |
| 2) அர்ச்சனை | 0-75 | 2-00 |
| 3) ஹாரத்தி | 0-25 | 1-00 |

### ஸ்ரீபத்மாவதிதாயார் கோயில், திருச்சானூர்.

| | | |
|---|---|---|
| 1) ஹாரத்தி | 0-25 | 1-00 |

# பிரபன்னரும் ஐந்து சேவைகளும்

செல்வி சோ.கி. கல்யாணி - மதுரை.

"எல்லா உபாயங்களையும் கைவிட்டு என்னையே சரணாக அடைபவனை நான் பாவத் தீயினின்றும் காப்பாற்றி விடுதலையளிப்பேன்" என்று கீதையில் கண்ணபிரான் கூறினார். இதுதான் பிரபத்தி. இந்த பிரபத்தியைச் செய்பவனே பிரபன்னன் ஆவான். ஒருவன் பிரபன்னன் ஆன பின்பு, அவனுடைய ஆன்மாவைக் பகவானே பொறுப்பாகிவிடுவதால், அவன் செய்ய வேண்டிய சேவை ஒன்றுமில்லை. தன் உடம்பு கொண்டு அவன் ஏதாவது செய்ய நினைத்தால், அவனது பிரபத்தி நழுவிவிடும். உடம்பு பழவினைகளுக்குக் கட்டுப்பட்டது. ஆகவே, உடம்பைப் பற்றிப் பிரபன்னன் கவலை கொண்டால் அவன் நாஸ்திகனாகி விடுகிறான்.

இனி, பிரபன்னன் தனது உள்ளம், உரை, செயல் என்ற மூன்றினாலும் தான் விரும்பிய எதையும் தன் விருப்பப்படி செய்யலாமா? என்ற வினா எழுகிறது.

"உள்ளம் உரைசெயல்
உள்ளம் மூன்றையும்
உள்ளிக்கெடுத்து இறை
உள்ளிலொடுங்கே"

என்று நம்மாழ்வார் கூறியுள்ளாரே! ஆழ்வார் அருளியபடி, எவ்வாறு இறைவனுள் ஒடுங்குவது எனப் பிரபன்னர் கேள்வி கேட்கலாம். எம்பெருமானாராகிய இராமானுசர் இக்கேள்விக்கு விடையாகப் பிரபன்னருக்கு ஐந்து சேவைகளைச் செய்யப் பணிக்கிறார். அவையாவன:

1) ஸ்ரீபாஷ்யத்தை ஆழ்ந்து கற்க வேண்டும். அதில் தான் பெற்ற அறிவைப் பரப்புதல் வேண்டும்.

2) ஸ்ரீபாஷ்யத்தை ஒருவன் படிக்க இயலவில்லையெனில், ஆழ்வார்களின் ஈரத்தமிழ்ப் பாசுரங்களைப் படித்து, அவர்கள் அருளிய மதிநலத்தைப் பரப்ப வேண்டும்.

3) பாசுரங்களைப் படிக்க இயலவில்லை எனில், ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்த திருக்கோயில்களில் திருவமுது சமைத்தல், சந்தனம் அரைத்தல், விளக்கேற்றல், மாலை தொடுத்தல் போன்ற காரியங்களைச் செய்ய வேண்டும்.

4) திருக்கோயில்களுக்குச் சேவை செய்ய இயலவில்லை எனில், பிரபன்னன் துவய மந்திரத்தின் பொருளைத் தியானம் செய்ய வேண்டும்.

5) தியானம் செய்வதும் இயலாத நிலையில் பிரபன்னன், ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு நன்மையை நினைப்பதும், அவர்களைப் பின்பற்றுவதும், தம் வாழ்வை அவர்களுடனே கழிப்பதும் செய்ய வேண்டும்.

"மேவித்தொழுதுய்ம்மினீர்கள்
வேதப்புனிதவிருக்கை
நாவில் கொண்டு அச்சுதன் தன்னை
ஞானவிதிபிழையாமே
பூவில் புகையும் விளக்கும்
சாந்தமும் நீரும் மலிந்து
மேவித்தொழும் அடியாரும்
பகவரும் மிக்கதுலகே"

என்ற நம்மாழ்வாரின் பாடலுக்கு உரை செய்த எம்பெருமானாரைப் பின்பற்றி நாம் உய்வோமாக.

திருவரங்கத்தமுதனார் திருவடிகளே சரணம்.

## திரைகள்

அறிவின் திரை சந்தேகம். அழகின் திரை முதுமை. வீரத்தின் திரை தயக்கம். விவேகத்தின் திரை ஆணவம். பக்தியின் திரை ஆசை, சபலம். தியாகத்தின் திரை சுயநலம். துறவின் திரை பற்று. பற்றுக்குத் திரை துறவு. வரவுக்குத் திரை நஷ்டம். வாய்மைக்குத் திரை பொய்; வறுமைக்குத் திரை பணம்; கருணையின் திரை சினம்; பொறுமையின் திரை அவசரம். நலத்தின் திரை நோய். நாதத்தின் திரை சுருதி பேதம்.

தகவல் : முசிறி சங்கரன் - விராலிமலை.

# "திருமகள் திருவடிக் காப்பு"

திரு. எஸ். கோபாலசாமி - கோவிந்தபுரம்.

தேவி திருமகள் திருவடி போற்றி!
மேவி யாம்படும் துயரினை மாற்றி,
நீல விழியருள் காட்டிடு தாயே,
மேலவன் மாலவன் உயர்துணை நீயே!!

பத்தவ தாரம் எடுத்தவன் பங்கில்
பரிதிச் சுடரென ஒளிரும் அன்னாய்!
இத்தரை வாழ்வு இனித்திட நானும்
இணையடி தொழுதேன்; மனங்கனி வாயே!

கதிரோன் கோடி உருகும்பொன் மேனி;
கனக மயிலாள் விழிமலர் தேனீ!
வெங்க டேசனின் மனங்கவர் ராணி!
மங்கள தேவி மகனுக் கருள்நீ!!

ஓமெனும் மந்திரத் துள்ளொளி நீயே;
''ஹ்ரீம்'' எனும் மந்திரத் தன்னையும் நீயே;
'ஸ்ரீம்' எனும் பீஜத்து ஸ்ரீதேவி தாயே,
மகனிவன் தழைக்க மனங்கனி வாயே!!

ஸ்ரீசக்ர தேரேறி தேவிநீ வருவாய்,
ஸ்ரீபீட நாயகி யாகநீ பொலிவாய்,
தாரணி முழுதும் தழைத்தருள் சொரியும்
நாரணி! நீயே எனக்கருள் செய்வாய்!!

மாலவன் மனதில் மத்தென சுழலும்
கோலமா அழகின் கொழுந்தே! விருந்தே!!
ஆலமா மரம்போல் அடியனும் தழைக்க,
வாழ்த்துவாய் தாயே! வழித்துணை நீயே!!

சங்கொடு, சக்கரம், கடம், மலர் ஏந்தும்
பங்கயச் செல்வி! பலர்புகழ் முதல்வி!
இங்கென் வறுமை இல்லா தொழிய
குங்கும இதழ்நகை புரிவாய் அம்மா!



மாதவன் உன்னை மனதில் வைத்தே
மாபெரும் செல்வ மன்னவன் ஆனான்!
மாதவச் செல்வி மனமும் வைத்தால்
பூதல முதன்மை புதல்வனும் பெறுவேன்!

வெள்ளிக் கிழமை உன்திரு நாளே!
நல்ல விளக்கின் நாயகி நீயே!
மங்களம் பெறுவதும் மாதுன் அருளே!
தங்கிட இவைகள் தாயருள் புரிவாய்!

பத்மா வதியென பத்மம் ஏறி
பத்ம நாபனின் பத்மம் ஆனாய்;
பத்மப் பிரியா! பத்ம வாசினி!!
பத்ம பாதம் பரிந்தருள் தாயே!!

குத்து விளக்கில் குளிரும் சுடரே!
பத்ம ரூபினி யாகம் மலரே!
'சித்'தெனும் தத்துவ சிந்தா மணியே!
எத்தால் உன்னை ஏத்துவ தம்மா!

ஆயிரம் இதழுடை தாமரை மீது
அமரும் அன்னம், அழகெழில் வண்ணம்
தாய்மனம் களித்தே தனயனை பார்த்தால்
நோய் எனும் வறுமை நொடியினில் மடியும்!

மறைகள் நான்கின் மறைபொருள் நீயே!
துறைதொறும் வெற்றியின் சூட்சமம் நீயே!
பாற்கடல் அமுதில் மாலவன் கொள்ள
தோன்றிய தேவி! துணைவரு வாயே!

மங்களம் என்றே மங்களம் செய்வார்
மங்கள மாகிடும் மங்களை உன்னை!
பொங்கிடும் விழியருள் தங்கிட வென்றே
இங்குனை தொழுவார் எல்லாம் பெறுவார்!

திருமுகம் மஞ்சள் குங்குமம் துலங்க,
திருமேனி எங்கும் பொன்னணி விளங்க,
திருவெலாம் அள்ளி திருவிழி வழங்க
திருமகள் வருவாள்; திருவடி தொழுவோம்!

'ஓம்' எனும் வீட்டின் உட்புறம் சென்று
'ஸ்ரீம்' எனும் தாயின் திருவடி விழுந்து
'அம்' எனச் சொல்வோம் அனுதினம் பணிந்து;
நம் துயர் மாயும்; நல்லருள் பாயும்!

மனம்எனும் பீடத்தில் மாதுனை ஏற்றி
அன்பெனும் மஞ்சன நன்னீ ராட்டி
மந்திர மலரினை தாளடி சாற்றி
வந்தனை செய்தேன்; வரமருள் தாயே!
குறையறு குணத்தினை குன்றென கொடுத்து
நிறைதனம், ஆயுள் நீளனக் களித்து
துறைதொறும் வெற்றிகள் தொடர்ந்திடகுவித்து
மறைமகள் தாயே! மனங்கனி வாயே!
ஆதி சங்கரர் அழைப்பினை ஏற்று
ஜோதி ரூபிணி! பொன்மழை பொழிந்தாய்
நாதி யற்றவன் நானுனை அழைக்க
ஏது காரணம் தாமத மம்மா?

நீல மேக நெடுமால் மார்பில்
கோல மயிலாள் குளிர்தரு பவளம்!
ஆல மாயிருள் அடர்வனக் காட்டில்
அடியவன் உள்ளேன்; அம்மா கவனம்!!
மங்கள வாத்தியம் எங்கும் முழங்க,
செங்கதிர்ச் செல்வன் தங்கதிர் வழங்க,
மங்கள தேவியர் திருவடி வணங்க,
திருமகளே! பள்ளி எழுந்தரு ளாயே!

புள்ளினம் நின்புகழ் போற்றி உரைக்க,
மெல்லிளம் தென்றல் கந்தம் இரைக்க,
தேவரும் மூவரும் கூடி சிறக்க
பூமகளே! பள்ளி எழுந்தரு ளாயே!
பாற்கடல் அமுதில் பலர்தொழ தோன்றி,
நூற்பல கற்பினும் உன்னருள் இன்றி
வாழ்வது அரிதென வையம் அறிய,
வந்தவள் வாழி! வல்லடி சரணம்!!




காக்கும மாலவன கற்பகத் தருவே!
காசினி வறுமை நீக்கும நிலவே!
பிருகு முனிவரின் பெருந்தவ மகளே!
தாளடி சரணம்; தாயருள தாருமம!
பெயர்கள் மாறி பெரியோன தமமுடன
அயர்வில் லாது அருளும் தாயே!
வந்தறு எந்தன் வல்லிடர் எல்லாம;
செந்திரு மகளே! திருவடி சரணம்!!
பத்தொடு ஆறு பேற்றினை தந்து
இத்தரை போற்ற வித்தைகள புரிந்து
என்றும் உன்னை மறவா திருந்து
குன்றென உயர குளிர்விழி காட்டு!
ஆலம் விழுதென ஆடும் குடிவில்
தாளம் போடும் சண்பக மலர்கள்!
ஏலங் குழலாள் இருவிழி மலர்கள்
ஏலம் கேட்கும் என்மடிப் பிணையை!
நவமணி, பொன்னணி நாளும் தந்து
நவகோள் பற்றினும் நீமுன் நின்று
தவமுனி மனத்தின் தண்மை தந்து
சீருடை வாழ்வின் சிறப்பினை அருளாய்!
பிருகு வம்ச பெருந்தகை யாட்டி!
முகுந்தன் வாழ்வின் முகிழ்நகை யாட்டி!
இகபர சுகமெலாம் இணையடி கூட்டி,
தகவுர அழைக்கும் மலைமகள் நாத்தி!
அஞ்சன விழிகள் அமுதினை சுரக்க,
கஞ்சுக வதனம் களிநகை சுமக்கும்
தஞ்சமென் றடியார் தாளினை பற்ற,
அஞ்சேல் என்றருள் அதுாந் தளிக்கும்!

## (நூற்பலன்)

"திருமகள் திருவடிக் காப்"பெனும் நிலை
ஒருமன தோடு ஓதுவார் தமக்கு
மருவில் செல்வம் ம்ன்பதை சேரும்
திருமகள் ஆணை திருவடிக் காப்பே!

# இறைவன் தொடர்ந்த வழக்கு

திரு. ஜி. ரெங்கராஜு - மதுரை.

வாழ்வில் நம்மை சூழ்ந்துள்ள மாயையால் நாம் பல தவறுகளைச் செய்து இறைவனையும் அவன் இருப்பதையும் மறந்து விடுகிறோம். இதனால் ஏற்படும் கர்ம பலனை நாமே அனுபவிக்க வேண்டியிருக்கிறது. இவ்வுலகில் தன்னை வெல்லுபவர்கள் யாரும் இல்லை என்ற அகந்தையில் வாழ்ந்த இரண்யன், கம்சன், இராவணன் முதலியோர் செய்த குற்றங்களுக்கு விதி தனது தீர்ப்பை வழங்கியிருக்கிறது. இதுபோல் சுந்தரர் (சுந்தரமூர்த்தி நாயனார்) செய்த குற்றத்திற்காக இறைவனால் தண்டனை கிடைக்கப்பெற்று, அதன்பின் அவனருளாலே தடுத்தாட்கொள்ளப் பட்டார். இவர் அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவர். திருநாவலூரில் வசித்து வந்த கோயில் அர்ச்சகர் சடையனுக்கும் இசை ஞானியாருக்கும் பிறந்தவர். தாயார் திருவாரூரைச் சேர்ந்தவர். பிறந்த குழந்தைக்கு ஆரூரன் என்று பெற்றோர் பெயரிட்டு அழைத்தனர். குழந்தை ஆரூரன் பார்ப்பதற்கு மிக அழகாயிருப்பான். ஒருநாள் கோயில் வீதியில் விளையாடிக்கொண்டிருந்த ஆரூரனை அவ்வூர் அரசன் பார்த்துவிட்டான். அவ்வளவுதான், அவனை அரண்மனைக்கு எடுத்துச் சென்று வளர்க்க வேண்டும் என்ற ஆவல் ஏற்பட்டது. அரசன் விருப்பத்தை மறுக்கமுடியாமல் குழந்தை ஆரூரனை அரசனிடம் பெற்றோர் ஒப்படைத்தார்கள். நரசிங்கமுனைவர் என்ற அரசன் குழந்தை ஆரூரனை நல்ல முறையில் வளர்த்தார். அரசனுக்கும், அந்தணனுக்கும் வேண்டிய கல்வியைப் போதிக்கச் செய்தார்.

ஆரூரன் என்றழைக்கப்பட்ட சுந்தரருக்கு மணப்பருவம் வந்தது. திருமண ஏற்பாடுகளைச் செய்யத்தொடங்கினார்கள். திருநாவலூர் பக்கத்திலே உள்ள புத்தூர் என்ற கிராமத்தில் வசித்துவந்த சடங்கவி சிவாசாரியார் என்ற அந்தணரின் பெண்ணை முறைப்படி பேசி திருமண நாளையும் நிச்சியித்தார்கள். வேத கோஷங்கள் முழங்க, மங்கள வாத்தியங்கள் ஒலிக்க மாப்பிள்ளையை அழைத்துவந்து திருமணப் பந்தலில் உட்கார வைத்தார்கள். அந்த சமயம் பார்த்து திடீரென்று ஓர் ஒற்றைப் பிராமணர் மணப்பந்தலுக்குள் நுழைகிறார். வந்த பெரியவரை அங்குள்ளவர்கள் வரவேற்கிறார்கள். ஆனால் அவரோ, தன் குரலை உயர்த்திப் பேசத் தொடங்கிவிட்டார்.

"இந்த திருமணத்தை நடத்த விடமாட்டேன். இங்கு அமர்ந்திருக்கும் இந்த மாப்பிள்ளை எனக்கு அடிமை" இதைக்கேட்ட மாப்பிள்ளை சுந்தரருக்கு வியப்பும், சிரிப்பும் ஏற்பட்டது. திருமணவீட்டார் பதறினார்கள். அங்கிருந்த பெரியவர்கள் திருமணம் நடக்கப்போகும் நேரத்தில் இப்படி ஓர் அபசகுணம் நடந்துவிட்டதே என்று வேதனைப்பட்டார்கள். ஆனால் கிழவேதியரோ தன பிடிவாததததை விடவில்லை. தனக்கு ஆதாரமாகத் தன்மடியில் வைத்திருநத ஓலையை எடுத்து வாசித்துக் காட்டுகிறார். இதைக் கேட்ட சுந்தரருக்கு கோபம் வந்துவிட்டது. அங்கிருந்த பெரியவர்கள் கொதித்து எழுந்தனர். கிழவேதியருக்கும் சுந்தரருக்கும் வாக்குவாதம் பெருகியது. "பித்தன போல் நீ உளருவதை நான் ஒரு காலும் ஏற்கமாட்டேன் மரியாதையாக இங்கிருந்து நீ போய் விடு" என்று கிழவேதியரை சுந்தரர் எச்சரிக்கை செய்தார். அத்துடன் நில்லாமல், அவர் கையில் வைத்திருந்த ஓலையையும் பிடுங்கிக் கிழித்து எறிந்துவிட்டார்.

திருவெண்ணைநல்லூரில் உள்ள சில பெரியவர்கள் கூடி பஞ்சாயத்து வைத்தார்கள். கிழவேதியர் அங்கு அழைக்கப் படுகிறார். வந்தவர் அங்கிருந்த ஓர் கல்திட்டின்மேல் ஏறி நின்றுகொண்டு ஓர் பிரசங்கமே செய்ய தொடங்கிவிட்டார்.

"பஞ்சாயத்து பெரியோர்களே இந்த வழக்கில் சம்பந்தப்பட்டு இங்குக் குற்றவாளியாக நிற்பவன் பெயர் ஆருரன். சுந்தரர் என்றும் இவனை அழைப்பார்கள். இவனுடைய பாட்டனார் பெயரும் ஆருரன். அவன்தானும் தன் பின் சந்ததியாரும் எனக்கு அடிமை என்று உறுதிமொழி செய்து பத்திரம் எழுதிகொடுத்திருந்தான். அந்த ஓலை பத்திரத்தை இவனிடத்

தில காட்ட வைத்திருக்கையில அதைப் பிடுங்கிக் கிழித்து எறிந்துவிட்டான். இப்படி இவன் செய்த செயலை நீங்கள் ஆதரிக்கிறீர்களா? நீங்கள் தக்க நியாயம் இதற்கு வழங்காவிட்டால், நான் இங்கிருந்து போகமாட்டேன்" ஆனால் அவர்களோ இம்மாதிரி ஒர் வழக்கை இதுவரை தாங்கள் பார்க்கவோ கேள்விப்பட்டதோ கிடையாது. இருந்தாலும், இதிலுள்ள உண்மையை அறிய விரும்புவதாகக் கூறினார்கள். இதைக் கேட்ட கிழவேதியர் நான் உங்களிடம் பொய் வழக்கு கொண்டுவரவில்லை. நான் கொண்டு வந்த ஒலைப்பத்திரத்தை இந்த பையன் கிழித்து எறிந்ததை இங்குள்ளவர்கள் பார்த்தார்கள். இதை யாரும் மறுக்கமுடியாது. இவன் செய்த செயலை நீங்கள் நடுநிலையில் இருந்து இந்த வழக்கை விசாரியுங்கள். நான் கொண்டு வந்திருந்த அடிமை பத்திர ஒலையை கிழித்து எறிந்து விட்டதால் நான் தோற்றுப்போய்விடுவேனா?" இது போன்ற பல கேள்விகளை கிழவேதியர் விமர்சனம் செய்தார்.

கிழவேதியரின் வாதங்களைக் கேட்ட பஞ்சாயத்து பெரியவர்களுக்கு, இந்த வழக்கைத் தீர விசாரித்து உண்மையை அறிந்துகொள்ளும் ஆவல் ஏற்பட்டது. விசாரிக்கத் தொடங்கினார்கள். ஆனால் சுந்தரரோ நடைமுறைக்கு மாறுன இவ்வழக்கில் தான் எதுவும் சொல்ல விரும்பவில்லை என்று கூறிவிடவே, பஞ்சாயத்தார்கள் தீர விசாரணை செய்து முடிவெடுக்கத் தொடங்கினார்கள்.

பஞ்சாயத்தார் கிழவேதியரைப் பார்த்து "நீங்கள் சுந்தரர் எனது அடிமை என்று கூறுவதை நிரூபித்துக் காட்டவேண்டும். இந்த ஓலைப்பத்திரம் எழுதப்பட்ட நேரத்தில் அதை நேரில் கண்டவர்கள் யாராவது இருக்கிறுர்களா?" என்று பஞ்சாயத்தார கேட்க, "தற்சமயம் யாரும் இல்லை. நான் ஒருவனே இருக்கிறேன்" என்ற பதில் அவரிடமிருந்து வந்தது. தொடர்ந்து பேசுகையில் இந்த பையன் கிழித்து எறிந்தது நகல் ஓலைதான். அதற்கு மூல பத்திர ஓலை என்னிடம் பத்திரமாக இருக்கிறது" என்று கூறினார். இதைக் கேட்ட பஞ்சாயத்தார் 'அப்படியானால் அதை எங்களிடம் காட்டினால் அதில் இருக்கும் உண்மையை அறிந்து முடிவு எடுப்பதாக'ச் சொன்னார்கள். பஞ்சாயத்தாரிடம் உறுதிமொழி பெற்றுக் கொண்டு தன் மடியில் வைத்திருந்த மூல ஓலைப் பத்திரத்தை எடுத்து அவர்களிடம் கொடுத்தார். அதை வாங்கியவர் அதிலிருந்த வாசகத்தை பின்வருமாறு யாவரும் கேட்க அங்குப் படித்துக்காட்டினார்.

"திருநாவலூரிலிருக்கின்ற ஆரூரன் என்கிற நான் திருவெண்ணெய்நல்லூரிலிருக்கின்ற பித்தனுக்கு, நானும் என் சந்ததியில் வருபவர்களும் அடிமைத்தொண்டு செய்வதற்கு மனப்பூர்வமாக எழுதிக்கொடுத்த பத்திரம் இது". இதில் ஆரூரன் என்ற கையெழுத்தும் போடப்பட்டிருந்தது.

எல்லாவற்றையும் ஆராய்ந்த பஞ்சாயத்தார் கிழவேதியர் சொல்லுவதிலும் உண்மை இருக்கலாம் என்ற முடிவுக்கு வந்தனர். இந்த நிலையை உணர்ந்து கொண்ட சுந்தரர் எதையும் சொல்லவோ செய்யவோ மறுக்கமுடியாதபடி பிரமித்து நின்ருர். இதற்கிடையில் பஞ்சாயத்தார் மீண்டும் சில கேள்விகளை அவரிடம் கேட்கத் தொடங்கினர்.

"தங்கள் ஊர் திருவெண்ணெய்நல்லூர் என்று கூறினீர்களே, இதுவரை நாங்கள் யர்ரும் அங்கு தங்களைப் பார்த்ததில்லையே! தங்கள் வீடு எங்கு இருக்கிறது?"

உடனே கிழவேதியர் "இதுவரை என்னிருப்பிடத்தை நீங்கள் யாரும் தெரிந்துகொள்ளாமல் இருப்பது ஆச்சரியமாக இருக்கிறது. என்னுடன் வாருங்கள் காட்டுகிறேன்" என்ருர். எல்லோரும் கிழவேதியர் பின்னால் புறப்பட்டுச் சென்றனர். திருவெண்ணெய்நல்லூர் கோயில் வந்ததும், பஞ்சாயத்தார் வெளியில் நிற்க, கிழவேதியர் கோயில் கருவறைக்குள் சென்று மறைந்தார். உள்ளே சென்றவர் திரும்ப வரவில்லை. இந்த அதிசயத்தைக் கண்டவர்கள் திகைத்தனர். இதே நேரத்தில் கோயில் உள் பிரகாரத்திலிருந்து அசரீரி ஒலி கேட்டது.

பஞ்சாயத்தார் மெய்மறந்தார்கள்.

"ஆரூரா! முன்பு எமக்குத் தொண்டனாக இருந்து சேவை செய்து வந்த நேரத்தில் அநிந்தை, கமலினி என்ற இருபெண்களைக் கண்டு அவர்கள் மேல் இச்சை கொண்டாய். உனது ஆசை நிறைவேற உனக்குப் பூமியில் பிறப்பு கொடுக்கப்பட்டது. செய்த தவறை நீ உணர்ந்தபின், மானிடப் பிறப்பில் சம்சார பந்தம் உன்னைத்தொடராதபடி நாமே வலிய வந்து திருமணப் பந்தலில் தடுத்தாட்கொண்டோம்" என்றது அந்த அசரீரி.

இதைக்கேட்ட சுந்தரர் கண் ணில் ஆனந்தக் கண்ணீர் பெரு கியது. திருவெண்ணைநல் லூர் பெருமானின் கருணையை எண்ணி எண்ணித் தேம்பி அழு தார். தன்னை ஆட்கொள்ள வந்த இறைவனிடம் குதர்க்க மான வார்த்தைகளைப் பேசி யதை நினைந்து நினைந்து அழுதார். இறைவனின் அசரீரி மேலும் கேட்டது.

"நீ எம்மோடு எதிர்த்து வாதா டினாய், ஆகையால் 'வன்றொண் டன்' என்ற பெயரை உனக் குச் சூட்டுகிறேன். நீ எனக்கு அன்போடும் ஆர்வத்தோடும் செய்த அருச்சுனையெல்லாம் இன்னிசை பாடலாகவே ஏற் றுக்கொண்டோம். இனி பாடிக்கொண்டே வாழ்ந்து இறுதியில் நம்மிடம் வரக்க டவாய்". சுந்தரரின் உள் ளம் நெகிழ்ந்துருகி "ஒன்றும் அறியாத அடியேனுக்கு நல்ல றிவை புகட்டிய பெருமானே! உன்னை என்ன சொல்லிப்பாடு வேன்" என்று கேட்கிறார். அதற் கும் இறைவன் பதிலளிக்கி றார். "நீ என்னுடன் வழக் காடுகையில் பித்தன் என்று என்னை ஏசினாயே, அந்த பித்த னென்றே சொல்லிப்பாடு" என் றார். அதன்பின் சுந்தரரின் உள் ளம் குளிர்ந்து பாடும் பணியை மேற்கொண்டு இறையருள் பெற திருத்தலங்கள் தோறும் பய ணத்தை மேற்கொண்டார்.

பித்தா பிறைசூடி பெருமானே
அருளாளா
எத்தான் மறவாதே நினைக்கின்றேன்
மனத்துன்னை
வைத்தாய் பெண்ணைத்தென்பால்
வெண்ணைய் நல்லூரருட்-
டுறையுள்
அத்தாவுனக் காளா இனி அல்லேன்
எனலாமே"

(சுந்தரர் தேவாரப்பாடல்)

வாழ்க்கையில் பக்தியோடு காரியங்களைச் செய்து ஒழுக் கநெறிகளைப் போற்றிக் காக் கவேண்டும் என்பதை நிரூபிக் கவே இறைவன் சுந்தரர் செய்த குற்றத்திற்குத் தண்டனை யைக் கொடுத்தார். அவ்வி றைவனே அவரைத் தடுத்தாட் கொண்டார் என்பது வரலாறு. அதை நாமும் வாழ்க்கையில் உணர்ந்து புரிந்து கொண்டு, பக்தியையும் ஒழுக்கத்தையும் உணர்ந்து உள்ளத்தில் வளர்க்க வேண்டும். மண் பெண் பொன் முதலியவைகளால் ஏற் படும் இடையூறுகளைக் கருதி, அந்தத் தீமையான குணங்க ளிலிருந்து விலகி நல்வாழ்வை அமைத்துக் கொண்டால், நமது உள்ளமே பெருங்கோவிலாகிவி டும். இறைவன் நம்மையும் ஆட்கொள்ள வந்துவிடுவான்.



கஜுரா கோயில் சிற்பங்கள் (ம.பி.)

# நான் எனும் அகந்தை

திரு. முஹ்யித்தீன் ஷாகுல் அமீத் - கும்மிடிப்பூண்டி

ஒரு நாள ஒரு இடத்திலே இரண்டு துறவிகள் சந்தித்துக்கொணடார்கள. இருவரும் வெகுநேரம் வரை எதை எதையோ பேசிககொண்டிருந்தனர். முடிவில் தங்களிருவரில் யார் உயர்ந்தவர் - யார் முதலில் சொர்க்கத்திற்குப் போக முடியும் என்பதைப் பற்றி வாதம் செய்ய ஆரம்பித்தனர்.

'நான்தான் முதலில் சொர்க்கத்திற்குப் போவேன்' என்ருர் ஒரு துறவி.

'இல்லையில்லை, நான்தான் முதலில் போவேன்' என்ருர் அடுத்த துறவி.

இல்லையில்லை நான்தான் முதலில் போவேன்.

முடியாது, முடியாது நான் தான் முதலில் போகமுடியும்...!

என்று இவர்கள் இருவரும் காரசாரமாகப் பேசிக்கொண்டிருக்கும்போது, அந்த வழியாக வந்த ஒரு எளிய பெண் இவர்களைக் கூர்ந்து கவனித்தாள். அடுத்து, வாயைத் திறந்து கணீர் என்ற குரலில் இப்படிக் கூறினாள். 'இப்படிப் பேசிக் கொண்டிருந்தால், நீங்கள் இருவரும் என்றைக்குமே சொர்க்கத்திற்குப் போகமுடியாது, நான் போனால்தான் சொர்க்கத்திற்குப் போகமுடியும்! என்ருள்.

"என்ன...! மெத்தப்படித்த வித்தகர்களான முற்றும் துறந்த முனிவர்களான நாங்கள் போக முடியாத சொர்க்கத்திற்கு ஒரு சாதாரணப் பெண்ணுன நீயா போகமுடியும் என்று சொல்கிருய்...! என்று இருவரும் ஆத்திரத்துடன் கேட்டனர்.

'ஐயா சொர்க்கத்திற்கு நான் போவேன் என்று சொல்லவில்லை, நீங்கள் இரண்டுபேரும் நான், நான் என்று மார்தட்டுகிறீரகளே, அந்த நான் என்ற அகந்தைப் போனால்தான் நீங்கள் சொர்க்கத்திற்குப் போக முடியும் என்று சொன்னேன்!" என்று பணிவுடன் கூறினாள் அந்தப்பெண். துறவிகள் இருவரும் திடுக்கிட்டு வெட்கித் தலை குனிந்தனர்.

* * *

ஒருமுறை வெளியில் சென்றிருந்த மஹாவிஷ்ணு தன்னுடைய பாற்கடல் பள்ளியறைக்குத் திரும்பி வரும் பொழுது வாயிலில் பாத அணிகளுடன் அப்படியே உள்ளே வந்துவிட்டார். பாம்பணை மஞ்சத்தில் படுத்தும்விட்டார். பாதஅணிகள் பாதங்களில் அப்படியே இருந்தன.

மஹாவிஷ்ணு சற்று கண் அயர்ந்ததும் அது வரைப் பொறுத்துக் கொண்டிருந்த விஷ்ணுவின் மகுடம் பாத அணியைப் பார்த்து எரிச்சலுடன் பேசியது; "யார் எங்கே இருக்கவேண்டுமோ அங்கேதான் இருக்க வேண்டும். பாதங்களில் இருக்க வேண்டிய நீ, மகத்தான பெருமை வாய்ந்த மகுடமாகிய எனக்கும், மகிமை வாய்ந்த சங்கு சக்கரம் ஆகிய உயர்ந்த பொருள்கள் உள்ள இடத்திற்கும் அருகில் நீ வந்திருக்கக்கூடாது. இது பெரிய குற்றம்!"

"நானாக இப்படி வேண்டும் என்று வரவில்லை. பரமாத்மா என்னை வெளியில் கழற்றிவிடாமல் என்னை உள்ளே கொண்டு வந்துவிட்டார் இதற்கு நான் என்ன செய்யமுடியும்" என்று பாதஅணி பணிவுடன் பதில் அளித்தது.

"பேசாதே...! வாயைமூடு! என்னை இருந்தாலும் நீ இங்கு வந்தது தவறுதான்!" என்று ஒரே குரலில் கர்ஜித்தன சங்கும் சக்கரமும்.

மகுடம், சங்கு, சக்கரம் ஆகிய மூன்றும் தன்னை இப்படி சரமாரியாகத் தாக்கிப் பேசியதைக் கண்டு மனம் நொந்த பாத அணி, கண்ணீர் மல்க விஷ்ணுவை நோக்கி முறையிட்டது; "பிரபோ! தேவரீர் தங்களின் திருஉளத்தின் திருவிருப்பத்திற்கேற்ப தங்களின் பொற்கமல பாதாரவிந்தத்தினை அரவணைத்துக்கொண்டிருக்கும் இந்த அடியேனை தேவரீர் தங்களின் மகுடமும் சங்கும் சக்கரமும் இப்படி அநியாயமாகப் பழித்துப் பேசுகின்றனவே. தாங்களதான் இந்த அடியேனைக் காக்க வேண்டும்!" என்று புலம்பியது.

பாத அணியின் அபயக்குரலைக் கேட்டு கண்விழித்த பரந்தாமன், உடனே நிலைமையை உணர்ந்து கொண்டதும், 'பாத அணியே கவலைப்பட வேண்டாம். தான் என்ற அகந்தையால் தன்னிலை மறந்து தகாதமுறையில் உன்னைப் பழித்துப்பேசிய மகுடமும் சங்கும் சக்கரமும் அதற்குரிய தண்டனையை அனுப

வித்தே தீரவேண்டும். அடுத்து வரும் நமது ராம அவதாரத்தின போது, இந்த சங்கும் சக்கர மும பரத சத்ருக்கன் என்ற பிறவிகள் எடுத்து உன்னைத் தங்கள் தலைகள் மீது சுமப் பார்கள். 14 ஆண்டுக்காலம் இந்த மகுடம் உனக்கே சூட்டப் படும். தான் என்ற அகந்தை கொண்டோர் எவ்வளவு உயர் வான இடத்தில் இருந்தாலும் தாழ்ந்து விடுவார்கள். தன்ன டக்கப் பணிவு கொண்டோர், எவ்வளவு கீழே இருந்தாலும் உயர்ந்து விடுவார்கள் என்ப தற்கு இது ஒரு எடுத்துக் காட்டாக இருக்கட்டும்!" என்று மஹாவிஷ்ணு திருவாய் மலர்ந் தருளினார்!

* * *

ஒரு ஊரிலே ஒரு பெரிய மேதை வாழ்ந்துகொண்டிருந் தார். ஒருநாள் ஒருமனிதன் அவரிடம் வந்து, தனக்கு ஏதா வது உபதேசம் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டான்.

மேதை அந்த மனிதனைத் தன் வீட்டின் உள்ளே அன் போடு அழைத்துச் சென்றார். அங்கே இருந்த ஒரு கண்ணாடி ஜன்னலைக் காட்டி 'இதன் வழி யாக வெளியே பார், என் னென்ன தெரிகின்றன என்று சொல்!' என்று கூறினார்.

அந்த மனிதன் கண்ணாடி ஜன்னல் வழியாக வெளியே பார்த்தான். வீதியில் நிறை யக் காட்சிகள் தென்பட்டன. யார் யாரோ போய்க்கொண்டும் வந்து கொண்டும் இருந்தார் கள். இன்னும என்னென்னவோ தெரிநதன. அவற்றையெல்லாம் பாரத்து மேதையிடம் கூறி னான்.

மேதை, 'சரி இனி இப்படி வா!' என்று வீட்டில் மற்றொரு மூலையில் இருந்த முகம் பாரக் கும் கண்ணாடியிடம் அவனை அழைத்துச் சென்றார். 'இப் போது இதில் என்னென்ன தெரிகின்றன கூறு' என்று சொன்னார்.

அந்த மனிதன் அந்த முகம் பார்க்கும் கண்ணாடியைப் பாரத்து நின்றான். அதில் அவன் முகத்தைத் தவிர வேறு எதுவும் தெரியவில்லை

அதை அப்படியே சொல் னான் - "நீ பாரத்தவை இரண் டும் கண்ணாடிதான். ஆனால ஒன்றிலே வெளிஉலகக் காட்சி கள் எல்லாம் தெரிந்தன. மற ரொன்றிலே நீ மட்டும்தான் தெரிந்தாய். ஏன அப்படி என்று தெரிகிறதா?" என்று கேட்டார மேதை.

அந்த மனிதன் சிந்தனையு டன் மவுனமாக இருந்தான.

மேதை தொடர்நது பேசினார. 'முதல் கண்ணாடி எந்த மாசு மருவும் இல்லாமல் அப்படியே இயல்பாக இருந்தன. அதனால் தான் அதன் மூலம் எல்லா வற்றையும் பார்க்க முடிந் தது. அடுத்த கணணாடியில ஒருவித பாதரசக் களிம்பு பூசப் பட்டுள்ளது. அதனால், அதில் அதன் எதிரில் நின்ற நீ மட டும்தான் தெரிந்தாய். இப்படித் தான் நம் மனம் என்ற கண் ணாடியில் நான், எனது என்ற நமது விருப்பு - வெறுப்பு களிம் புகள் இருக்கும் வரை அதில் நமக்கு நமது ஆசாபாச அவ லக் காட்சிகள மட்டும தான தெரியும.

அதே மனததில நான் எனது எனற விருபபு - வெறுபபு களிம் புகள் முழுமையாக துடைத் தெறியப்பட்டுத் தூய்மைநிலை ஏற்பட்டால் அதன்பின் அதன் மூலம் அனைத்தையும் தரிசிக கலாம்!" என்று கூறிமுடித்தார் மேதை.

* * *

நிருபராக இடைக்கால போதா இளையிட்டுள்ளடைச் சேர்ந்த சுவாமி சச்சிதானந்தா வில் ஆனந்தாகத்து பெண கோலை நிருபர் மகளிர் கல்லூரி மாணவிகள் மத்தி யில் பேசிக்கொண்டிருந்த போது. "நமக்கும் கடவுளுக்கும் இடையிலே உள்ள தூரம் எவ்வ ளவு என்று தெரிந்துகொள்ள விரும்புகிறீர்களா?" என்று கேட டார்.

மாணவிகளுக்கு ஆரவம் தாபக முடியவில்லை. ஆமாம், ஆமாம்!! என்று ஒரே சப்தம்!

சுவாமி சச்சிதானநதா அமை தியாகச் சொன்னார, 'என்னு டையது என்னுடையது' என்று நீங்கள எதையெல்லாம் நினைக் கிறீரகளோ, சொல்கிறீர்களோ, அவற்றையெல்லாம் ஒன்றுகூட விடாமல் ஒருபட்டியல் போடுங் கள், என்னுடைய பேனா, என் னுடைய புடவை என்னுடைய அழகு, என்னுடைய நகை, இப் படி எல்லாவற்றையும் எழு துங்கள். பட்டியல் எவ்வளவு நீளமாக வருகின்றதோ, அந்த தூரம்தான், கடவுளுக்கும் நமக் கும் இடையிலே உள்ள இடை வெளி. பட்டியல் பெரியதாக இருந்தால இடைவெளி அதிகம், பட்டியல் சிறியதாக இருந்தால் இடைவெளி குறைவு! பட்டி யலே இல்லையென்றால் இடை வெளியே இல்லை என்று அர்த் தம்! நான் எனது என்று நாம் போடும் பட்டியலைச் சுருக்கச் சுருகக இடைவெளி குறையக் குறையக் கடவுளை நெருங்கிக் கொண்டே இருக்கலாம்!" என்று கூறி முடித்தார்.!

"யான் எனதென்னும்
செருக்கறுப்பான்
வானோர்க்குயர்ந்த உலகம் புகும்!"

எனபது வளளுவரின வாய் மொழி!



(3-ஆம் பக்கத் தொடர்ச்சி)

அறநெறிபிறந்ததாலும்தான். தன்னைக்குறித்து கடுந்தவம் புரிந்து வரங்கள்பல பெற்ற சிவபக்தர்கள், அவ்வரங்களைத் தவறாகப் பயன்படுத்தி மண்ணோரையும் விண்ணோரையும் துன்புறுத்தி இறுதியில் மரணத்தைத் தழுவிய நிலையில், வரம் தந்த சிவனார் அவர்களைக் காத்திட ஏன் வரவில்லை என்பதைச் சற்றே எண்ணிப்பார்த்திட வேண்டும். அறிவும், ஆற்றலும் ஆக்கத்திற்குப் பயன்படாதபோது, அதனால் இவ்வையகம் பெருமை பெறாதபோது, அழிவுக்கு வித்திடும்போது அவ்அறிவும் ஆற்றலும் அழிக்கப்படவேண்டியதுதான் என்பதே பெறப்படும் உண்மையாகும்.

ஒருநாட்டின் தலைவன் என்ற முறையில், சிவபக்தன் என்ற நிலையில் எவ்விதக் குறையினையும் இராவணனிடம் காணமுடியாது. செல்வச் செழிப்பிலும், மகிழ்ச்சிக்கடலிலும் இலங்கை மாநகரம் இந்திரலோகத்தைவிட அதிகமாக மூழ்கியிருந்தது. இலங்கேஸ்வரனின் பக்தி இசையால் கைலாயமே கலகலத்தது. ஆனால் காமம் எனும் பலவீனத்தால் உற்றாரை இழந்தான். ஆற்றல்மிக்க துணை பல இழந்தான். இறுதியில் அம்பொன்றால் தனிமனிதன் ஒருவனால் மண்ணில் சாய்ந்தான். தன் தமையனான இரண்யாட்சன் இறந்தபோது, அழுதிட்ட தாய்க்கு வாழ்க்கை நிலையாமை தத்துவம் கூறிய இரண்யகசிபு 'நான்' 'எனது' என்ற அகங்காரம் காரணமாக, தீவிர பக்தன் ஒருவனுக்குத் தீங்கிழைத்ததன் காரணமாக இரக்கமற்ற முறையில் உடல் கிழிய மரணம் பெற்றான். இவ்வகையில் கம்சன், பாணாசுரன், திரிபுராசுரர்கள், தட்சன், துரியோதனன், பலிசக்ரவர்த்தி என அழிந்துபட்ட தீயோர் பட்டியல் தொடரும். நம்மிடம் உள்ள அறிவு, அன்பு, அமைதி, ஆற்றல் போன்றன நமக்குப் பயன்படவேண்டுமென்றால் அவையாவும் முதலில் பிறருடன் பங்கிடப்பெறவேண்டும். இதுதான் நமது சமயம் போதித்த பேருண்மையாகும். இன்றைய நிலையில் நமக்குத் தேவையான அனுபவமுமாகும். அறிவு சுருங்கினால் ஆணவம், அன்பு மறைந்தால் கோபம், அமைதி குலைந்தால் வன்முறை, ஆற்றல் நெறிப்படுத்தப்படாவிட்டால் அழிவு என்பதுதான் இயற்கையின் தீர்ப்பு என்பதை அறிதல் அவசியம்.

'நான்' 'நமது' என்ற உணர்வு மறைந்து நாம நமது என்ற எண்ணம் தோன்றிடின் நாடும், நாமும் நாளும் உயர வழி பிறக்கும்.



(37-ஆம் பக்கத் தொடர்ச்சி)

[இங்கு ஞானமெனும் மெய்யறிவின் சிறப்பு வலியுறுத்தப்படுகிறது. மெய்யறிவின் இறுதிப்பயன் ஆத்ம போதம் எனும் விழிப்பினை- உணர்வினை தோற்றுவிப்பதுதான். சூரியன் உதித்தவுடன் எவ்வாறு இருள் மறைகிறதோ, விழிப்பு தோன்றுகின்றதோ, செயலாற்றும் ஆற்றல் வந்தமைகிறதோ, அவ்வாறு ஆத்ம ஞானம் வரப்பெற்றவுடன் அறியாமை எனும் இருள், சந்தேகம் எனும் கேடு, தவறுகள் எனும் இடையூறுகள் யாவும் விலகிவிடுமாம்.]

**இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்ம வித்யாயாம் யோகசாஸ்த்ரே ஸ்ரீகிருஷ்ணார்ஜுன ஸம்வாதே ஞானகர்ம ஸந்யாஸ யோகோ நாம சதுர்த்தோऽத்யாய: ||**

பிரம்ம அறிவை சொல்லித் தருவதும், யோக சாத்திரமானதும், ஸ்ரீகிருஷ்ணனுக்கும் அர்ச்சுனனுக்கும் இடையே ஏற்பட் உரையாடலுமாகவும் அமை துள்ள பகவத்கீதை எனும் உ நிடதத்தின்கண் அமைந்துள் ஞானகர்ம ஸந்யாஸ யோக என்ற இந்த நான்காம் அத் யாயம் (முடிவுற்றது.)

(தொடரு

## சோம்பேறி யார்?

எந்த வேலையும் செய்யாமல் உண்டு உறங்கி வாழ்பவன் மட்டும் சோம்பேறி அல்ல. தற்போது செய்து கொண்டிருக்கும் வேலையை இன்னும் சிறப்பாகச் செய்து முடிப்பதற்குத் தன்னிடம் திறமை இருந்தும் வசதி வாய்ப்புக்கள் இருந்தும் அதனைச் செய்யாமல் இருக்கிறானே, அவனும் சோம்பேறிதான்.

தகவல்: முசிறி சங்கரன்- விராலிமலை.

Edited and published on behalf of T.T. Devasthanams by K. Subba Rao, M.A., and Printed at T.T.D. Press
by M. Vijayakumar Reddy, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

